Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM

# ஸ்ரீ ராமாநுஜன் 215

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி *—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

15— —1966ல் வெளியிட்டது.

# P. B. அண்ணங்கராசார்யர் பதிப்பித்த முக்கிய நூல்களுக்கு

## அகராதி வரிசையில் ஜாபிதா

ஸ்ரீ எழுத்தை முதலில் கொண்ட நூல்கள்

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ குணரத்நகோச விரிவுரை | 2 | 00 |
| 2. | ஸ்ரீ சைலேசமந்த்ர ப்ரபாவம் | 1 | 00 |
| 3. | ஸ்ரீவரவரமுனிதண்டகம்உரையுடன் | 1 | 00 |
| 4. | ஸ்ரீ வரவரமுனி ஸ்தோத்ரங்கள் | 1 | 00 |
| 5. | ஸ்ரீவேங்கடநாதஸ்தோத்ரம்உரையுடன் | 0 | 75 |
| 6. | ஸ்ரீ மஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம் | 1 | 00 |
| 7. | ஸ்ரீ ரங்கராஜஸ்தவ வியாக்யானம் | 4 | 00 |
| 8. | ஸ்ரீ ரங்க ஸ்ரீ: (வடமொழியிலும்) | 1 | 00 |
| 9. | ஸ்ரீ ராமாநுஜ பூஷணம் | 1 | 00 |
| 10. | ஸ்ரீ ராமாநுஜ ஜயந்தி மலர் | 1 | 00 |
| 11. | ஸ்ரீ ராமாயண ரஸ்யரஹஸ்யம் | 0 | 75 |
| 12. | ஸ்ரீ ராமாயண ஸௌரபம் | 1 | 00 |
| 13. | ஸ்ரீலோகாசார்ய ஸ்துதி-உரையுடன் | 0 | 75 |
| 14. | ஸ்ரீ வசனபூஷண ஸாரம் | 2 | 00 |
| 15. | ஸ்ரீ வைஷ்ணவ மஹாநிதி | 1 | 00 |
| 16. | ஸ்ரீ வைஷ்ணவ ஸௌபாக்யம் | 1 | 00 |
| 17. | அத்திகிரி வைபவம் | 0 | 75 |
| 18. | அத்புத சக்தி | 0 | 75 |
| 19. | அத்புதோபந்யாஸ மாலை | 1 | 50 |
| 20. | அத்யாபக ஹஸ்த பூஷணம் | 1 | 25 |
| 21. | அபூர்வ ராமாயணம் | 1 | 50 |
| 22. | ஷை ஆங்கிலத்தில் | 1 | 25 |
| 23. | அழகியசிங்கர் ப்ரபாவம் | 1 | 00 |
| 24. | அமுதையும் அழச்செய்கையும் | 0 | 75 |
| 25. | அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்த நிதி (324 உபந்யாஸங்கள்) | 3 | 00 |
| 26. | அறுபத்திரண்டு உபந்யாஸ மாலை | 2 | 00 |
| 27. | அறுபத்திரண்டு வார்த்தா மாலை | 2 | 00 |
| 28. | அறுபத்துமூன்று உபந்யாஸ மாலை | 2 | 00 |
| 29. | ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி | 1 | 50 |
| 30. | ஆச்சான்பிள்ளையாறு ரஹஸ்யம் | 1 | 00 |
| 31. | ஆசார்யசிஷ்ய ஸம்வாத கண்டனம் | 1 | 00 |
| 32. | ஆசார்யஹ்ருதயப் பதவுரை | 4 | 00 |
| 33. | ஆசார்யஹ்ருதயம் பாடபரிஷ்காரம் | 1 | 00 |
| 34. | ஆர்த்திப்ரபந்தவுரைமுதலானவை | 2 | 50 |
| 35. | ஆழ்வார்கள் உகந்த ராமன் / ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன் | 1 | 25 |
| 36. | ஆழ்வார்கள் வைபவம் | 1 | 00 |
| 37. | ஆழ்வார்களின் கால நிர்ணயம் | 1 | 00 |
| | ஷை ஆங்கிலம் | 1 | 00 |
| 38. | இயற்பா ஆயிரமும் தீபிகை யுரை | 15 | 00 |
| 39. | உபதேச ரத்தின மாலை உரை | 1 | 00 |
| 40. | உபந்யாஸ சதத்வயம் | 4 | 00 |
| 41. | உபந்யாஸ ஸப்தகம் | 1 | 00 |
| 42. | உள்ளுறை பொருள் விளக்கு | 1 | 50 |
| 43. | எம்பெருமானார் தரிசனம் / எம்பெருமானார் வைபவம் | 1 | 50 |
| 44. | எம்பெருமானாரறுபத்திரண்டு | 1 | 50 |
| 45. | எழுபத்துநான்குவிருந்து | 1 | 25 |
| 46. | ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை | 2 | 25 |
| 47. | ஐப்பசித் திருமூல மலர் | 1 | 50 |
| 48. | ஐப்பசித் திருமூல நன்னாட்சிறப்பு | 1 | 00 |
| 49. | ஒருமிதுனமே உத்தேச்யம் | 0 | 75 |
| 50. | கண்டீரவாவதாரகாரண நிரூபணம் | 0 | 75 |
| 51. | கம்பர்கண்ட கண்டீரவம் | 0 | 75 |
| 52. | கம்பரின்பக்கவித்திரட்டு | 2 | 00 |
| 53. | கூரத்தாழ்வான் வைபவம் | 0 | 75 |
| 54. | கோதாஸ்துதி யுரை முதலியன | 1 | 00 |
| 55. | கோதை தமிழ்ச்சுவை யமுதம் | 1 | 00 |
| 56. | கோதை போலுமாராய்ச்சி | 1 | 50 |
| 57. | க்ஷேத்ர தீர்த்த யாத்திரை விளக்கு | 1 | 00 |
| 58. | சங்கத் தமிழ்மாலை முப்பது | 1 | 00 |
| 59. | சதபூஷணி வஜ்ரகுடாரம் | 1 | 00 |
| 60. | சதபூஷணீ வஜ்ரகுடார ஸாரம் | 1 | 00 |
| 61. | சரம ச்லோகார்த்த ஸாரம் | 1 | 00 |
| 62. | சரணாகதி ஸாம்ராஜ்யம் | 0 | 75 |
| 63. | சாடுச்லோக சதகம் உரை | 1 | 00 |
| 64. | சாரீரக மீமாம்ஸை | 1 | 00 |
| 65. | சிங்கப்பெருமாள்திருவாக்குவெற்றி | 3 | 00 |
| 66. | சேஷாவதாரச் சிறப்பு | 0 | 75 |
| 67. | ஜகதப்யுதயைக மூலம் | 1 | 00 |
| 68. | ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி | 1 | 00 |
| 69. | ஞானஸார உரை முதலியன | 1 | 50 |
| 70. | தசாவதாரஸ்தோத்ரஉரைமுதலியன | 1 | 50 |
| 71. | தத்வத்ரய ஸாரம் | 1 | 50 |
| 72. | தத்வஹிதோபதேசம் | 1 | 00 |
| 73. | தத்வார்த்த பூஷணம் | 1 | 00 |
| 74. | தானேயெழுதிய தன் சரிதை | 3 | 00 |

# ஸ்ரீ ராமாநுஜன்—215







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 19 | 1966 நவம்பர் மாதத்திற்காக 15—10—66-ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 11 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—91.

தாளடைந்தோர் தங்கட்குத் தானே வழித்துணையாம்*
காளமேகத்தைக் கதியாக்கி—*மீளுதலாம்
ஏதமிலா விண்ணுலகில் ஏகவெண்ணும் மாறனென*
கேதமுள்ள தெல்லாங் கெடும்.

| | | | |
|---|---|---|---|
| தாள் அடைந்தோர் தங்கட்கு | தன் திருவடிகளைப் பற்றினவர்களுக்கு | மீளுதல் ஆம் ஏதம் இலா | மீட்சியாகிற குற்றமில்லாத |
| | | விண் உலகில் | பரமபதத்தில் |
| தானே வழித்துணை ஆம் காளமேகத்தை | தானே மார்க்கபந்துவாகின்ற காளமேகப் பெருமாளை | ஏக எண்ணும் | எழுந்தருளவெண்ணின |
| | | மாறன் என | ஆழ்வார் என்று சொன்ன வளவிலே |
| கதி ஆக்கி | வழிக்கு ரக்ஷகனாகக்கொண்டு | கேதம் உள்ளது எல்லாம் கெடும் | துக்கமென்பதெல்லாம் தொலையும். |

* * *—தாளதாமரைக்குக் கீழ்ப்பதிகமாகிய *மாலைநண்ணியில் *மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்* என்றபடியே 'தேஹாவஸானத்திலே பேறு' என்று எம்பெருமான் நாளிட்டுக் கொடுக்கையாலே புறப்படவொருப்பட்டார் ஆழ்வார். அவர்க்குத் திருமோகூர்க் காளமேகப் பெருமாள் வழித்துணையாக அமைந்தார்—என்னுமிவ் விஷயம் *தாளதாமரையென்னும் பதிகத்தில் அருளிச்செய்யப்பட்டதென்கை.

*மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்* என்று மாலைநண்ணிப் பதிகத்தில் அருளிச்செய்ததானது எம்பெருமானுடைய திருவுள்ளக் கருத்தை அநுவாதம் செய்தபடி

யன்றே. 'ஆழ்வீர்! கர்மாவஸானத்தில் மோக்ஷமென்றும் ப்ராரப்த தேஹாவஸானத்தில் மோக்ஷமென்றும் இரண்டுபடியுண்டு; கர்மாவஸானத்தில் மோக்ஷமென்றால் நீர் ஸஹித்திருக்கமாட்டீர்; மேலும் உமக்குக் கர்மசேஷமிருக்கவுமில்லை. தேஹாவஸானத்தில் மோக்ஷம் நிச்சிதம்' என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றினதை ஆழ்வார் அறிந்து வெளியிட்டருளினதாகத் தேறி நின்றது. தேஹத்தின் அவஸானம் என்றைக்கு ஆகுமென்று ஆழ்வார் ஆலோசிக்கவேண்டுமோ? *இழை நல்ல வாக்கையும் பையவே புயக்கற்றது* என்றும் *என்னுயிர் கூவிக்கொடுப்பார்க்கு மித்தனைவேண்டுமோ?* என்றும் கீழே அருளிச் செய்தவராகையாலே மிகவும் கட்டுக்குலைந்த தம் திருமேனியின் முடிவு அணித்தென்று தாமே அறுதியிட்டுக் கொண்டார். திருநாட்டுக்குப் பயணஞ்செய்ய ஸந்நாஹம் பண்ணவேணுமென்றுகொண்டு முந்துறமுன்னம் வழித்துணையாகத் திருமோகூர்க் காளமேகப் பெருமாளைப் பற்றுகிறதாகச் சொல்லுகிறது தாளதாமரைப் பதிகம்.

பரம பதத்திற்குச் செல்ல வழித்துணை வேணுமோ? *அர்ச்சிர் திநபூர்வபக்ஷஷடுதங் மாஸாப்தவாதாம்சுமத் க்லௌவித்யுத் வருணேந்த்ரதாத்ருமஹித:* என்று நடாதூரம்மாள் பணித்தபடியே அர்ச்சிராதிகள் வழிநடத்தவன்றோ போகிறது; வேறு வழித்துணை ஏதுக்கு? என்று ஒரு கேள்வி பிறக்கும். வராஹ சரமச்லோகத்தில் *ததஸ் தம் ம்ரியமாணம் து காஷ்டபாஷாணஸந்நிபம், அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்* என்று எம்பெருமான்தானே வழி நடத்திக்கொண்டு போவதாகச் சொல்லியிருக்கையாலே திருநாடு செல்வார்க்கெல்லாம் அவனே வழித்துணையாகிறானென்னுமிடம் சாஸ்த்ரஸித்தமுமாயிராநின்றது. அப்படி வழித்துணையாகும் பெருமான் திருமோகூரிலே வந்து ஸன்னிதி பண்ணியிருக்கிறானாகக்கொண்டு அப்பெருமானையே வழித்துணையாகப் பற்றுகிறார். வழித்துணையாமிடத்து ஞானத்தாலும் சக்தியாலும் குறையற்றிருப்பானொருவனேயன்றோ ஆகவேணும். அவன்றான் விரோதிநிரஸன நிபுணனாகவுமிருக்க வேணும். இத்தகைய வாய்ப்பெல்லாம் திருமோகூரெம்பெருமான் பக்கலிலே குறையற்றிருக்கிறபடியைத் தாளதாமரைப்பதிகத்தில் அநுஸந்திப்பதுஞ் செய்கிறாராழ்வார். ஆசார்ய ஹ்ருதயத்தில் "மார்க்கபந்து சைத்யம் மோஹனத்தே மடுவிடும்" என்றருளிச் செய்த சூர்ணிகை இங்கே அநுஸந்தேயம். ... ... ... (91.)

## அன்பர்களுக்கு அறிவிப்பு.

நம் ஸ்ரீ ராமாநுஜனுக்கு அடுத்த இதழில் பதினெட்டாம் பிராயம் பூர்த்தியடைகின்றது. அதாவது, 216 லக்கங்கொண்டு வெளிவரப்போகிற அடுத்த இதழில் பதினெட்டாண்டு நிரம்புகின்றது. சந்தா பாக்கியுள்ளவர்கள் பலர் இருப்பதால் அன்னவர்களுக்கு நினைப்பூட்டுகிறோம். கார்த்திகை மாதத்துப் பத்திரிகை இப்போதே புரட்டாசியிலேயே வெளிவந்துவிட்டது. மார்கழி மாதத்துப் பத்திரிகை ஐப்பசியில் வெளிவந்துவிடும்.

**மறுபதிப்புத் தெரிவிப்பு;**—ஸ்ரீ ராமாநுஜன் ஆசிரியருடைய வியாக்கியானத்தோடு கூடிய கத்யத்ரயம், ஸ்ரீ குணரத்னகோசம், திருவாய்மொழி ஏழாம்பத்து இவை இரண்டொரு வருஷமாக துர்லபமாயிருந்தன; இவை இப்போது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் மூலமாக மறுபதிப்பேறி விட்டன. அபேக்ஷையுள்ளவர்கள் பெறலாம். ❋

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலை:—ஏற்கெனவே ப்ரகடனம் செய்திருந்தபடி இந்த க்ரந்தமாலை மணவாளமாமுனிகளின் திருவுள்ளப்படியே விரைவாகவே அச்சாகி வருகின்றது. இதன் முதல் ஸம்புடம் ஐப்பசித் திருமூல மஹோத்ஸவத் தொடக்கத்தில் வெளிவந்துலவும். மாமுனிகளின் பன்னிரண்டு திவ்யக்ரந்தங்கள் கொண்டது முதல் ஸம்புடம். ... ... ... ... ❀

இப்படிக்கு, க்ரந்தமாலா கார்யாலய கார்யதர்சி.

## அடியேனுடல்நிலை

நாற்றிசையிலுமுள்ள பல அன்பர்கள் அடியேனுடல் நிலையைப்பற்றித் தெரிவிக்க விரும்பினபடியே யிருக்கிறார்கள். அவரவர்களுக்குத் தனித்தனியே தெரிவிக்க இயலாது இதில் விஜ்ஞாபிக்கிறேன்; அஸ்வாஸ்த்யம் ஆரம்பித்ததினம் 21—2—1964. அன்று முதலின்றறுதியாக ஒரே நிலைதான். அசக்தியில் ஏற்றத்தாழ்வின்றியே யிருப்பதைப் பேரருளாளனுடைய பேரருட்பொலிவாகவே விச்வஸித்திருக்கின்றேன். உபக்ராந்த சிஷ்டங்களாயிருக்கின்ற பலபல பணிகளை நிறைவேற்றிக்கொள்ளவே பெருந்தேவி மணவாளனான பேரருளாளன் வைத்திருக்கிறானென்றிருக்கிறேன். (P. B. A.) ❀

## 31—9—66 வரை ஸ்ரீ ராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்.

| Madras Members. | | No. |
|---|---|---|
| 156. | B. R. புருஷோத்தம நாயுடு | 2 |
| 157. | S. லக்ஷ்மீநாராயணன் | 24 |
| 158. | S. ராமஸாமி ஐயங்கார் | 24 |
| 159. | C. திருவேங்கட முதலியார் | 10 |
| 160 | K. S. கிருஷ்ணஸ்வாமி | 33 |
| 161. | M. S. தேவராஜுலு செட்டி | 21 |
| 162. | A. Ramaswami, B.A. | 7 |
| 163. | S R. Sampath | 17 |
| 164. | K. Ramaia Chetty | 1 |
| 165. | G. Ayyalu Naidu | 21 |
| 166 | ஸ்ரீரங்கம் ஜகன்னாதாசாரி | 33 |
| 167. | G. கன்னைய நாயுடு | 7 |

வெளியூர் மெம்பர்கள்:

168. A Parthasarathi, மதுரை
169. K. S விஜயராகவாசாரி, காஞ்சி
170. P. M. பெருமாள் செட்டி, காஞ்சி
171. R. பத்மநாபன், சிதம்பரம்
172. T. S. ராமன், ஈரோடு
173. S. R. D. ராமகிருஷ்ணராமாநுஜர், திண்டுகல்
174. J. சாமி செட்டியார், திண்டுகல்
175. N. C. ஸ்ரீநிவாஸய்யங்கார், Bangalore
176. D. திருவேங்கடஸாமி ஐயங்கார், Advocate, பட்டுக்கோட்டை
177. P. B. திருவேங்கடாசாரியார், அண்ணன்கோயில்
178. ஸ்ரீ புருஷோத்தமன், பாண்டிச்சேரி
179 P கோவிந்தய்யங்கார், வெங்குடி
180 V. முத்துஸாமி ஐயங்கார், புத்தூர்
181 பரமஸ்வாமி, விழுப்புரம்
182. வானமாமலை அலமேலம்மா. Neyveli
183. R. P. ராமையங்கார் ஆழ்வார் திருநகரி
184. ஜகன்னாதய்யங்கார் (Now) கல்கட்டா
185. சாமு ஐயங்கார், ஸ்ரீவில்லிபுத்தூர்
186. மஹாலக்ஷ்மி இண்டஸ்ட்ரியல், சித்தூர்
187. R விஜயராகவையங்கார், மேலவிடயல்
188. கோடா. G. லக்ஷ்மண செட்டியார், சேலம் (ஜீவ்யச் சந்தா)
189. திருக்கோவலூர் எம்பெருமானார் ஜீயர் மடாதிபதி திருவேங்கடராமாநுஜாசார்யர்
190 K. S. வீரராகவ ராமாநுஜர், குரிச்சிபாளையம்
191. கோதை குட்டியம்மா, சிங்கப்பெருமாள்கோயில்
192. ஆ. பெருமாள் ராமாநுஜம், சேலம் 3

# திருமலையில் பெரிய ஜீயர் ஸ்வாமி.

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யராய், திருவேங்கடமுடையானுடைய நித்ய கைங்கர்ய நிர்வாஹ துரந்தரராய் எழுந்தருளியிருக்கும் (வர்த்தமான) பெரிய ஜீயர் ஸ்வாமியை ஸ்ரீவைஷ்ணவவுலகம் முழுதும் நன்கறியும். ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஸ்ரீமது பயவே. ஸாது. ராமாநுஜாசார்ய ஸ்வாமியென்று ப்ரஸித்தராயெழுந்தருளியிருந்தவர். ந்யாய வேதாந்தாதி சாஸ்த்ராப்யாஸங்களும் அத்யாத்ம வித்யாபரிச்ரமங்களும் ஸ்ரீபெரும் பூதூரில் ஸ்ரீமதுபயவே. ஆஸூரி. பெரிய ஸ்வாமி ஸன்னிதியில் ஆயின. மதுரை. கூடலழகர் ஸன்னிதியிலும் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸன்னிதியிலும் சிலபல வருஷங்களெழுந்தருளியிருந்து உபய வேதாந்த ரஹஸ்ய க்ரந்த ப்ரவசனங்கள் செய்தருளின காலங்கள் அடியேன் நேராக அறிந்தவை.

ஸ்வாமியின் திருவவதாரம் ஸ்ரீவில்லிபுத்தூரிலானலும் அங்கே யெழுந்தருளியிருந்த காலம் ஸ்வல்பமாகத்தான் தேறும். ஸ்வாமிக்கு உபபதமாக வழங்கும் 'ஸாது' என்னும் வ்யபதேசத்தைப்பற்றிச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன். பெரியாழ்வார் தமது திருமொழியில் கண்ணபிரானுடைய வேணுகானத்திற்கென்று ஒரு பதிகமருளிச்செய்துள்ளார். *நாவலம் பெரிய தீவினில்வாழும் நங்கைமீர்களிதோர் அற்புதங்கேளீர்* என்று தொடங்கி. இப்பதிகத்திற்குப் பலனுரைக்கும் நிகமனப் பாசுரத்தில் *விட்டுசித்தன் விரித்த தமிழ் வல்லார், குழலைவென்ற குளிர்வாயினராகிச் சாது கோட்டியுட் கொள்ளப்படுவாரே* என்பதாகப் பலச்ருதியுள்ளது. வேணுகானப்பதிகம் வல்லவர்களுக்கு ஸாது கோஷ்டியில் அந்தர்ப்பாவம் பலனுகச் சொன்லப் பட்டதாயிற்று. இந்தப் பாசுரத்தை யடியொற்றி ஸாது கோஷ்டியென்றொரு ஸந்ததியுண்டாயிற்றா? அல்லது ஏற்கெனவே ஸாது கோஷ்டி யென்றொரு ஸந்ததி பரம்பரையாகவிருந்து அதுதன்னிலே ஜனிக்கப்பெறுகையை இங்குப் பலனுகவருளிச் செய்தாரா? என்று விமர்சிக்க ப்ராப்தமாகும். இரண்டு வகையும் ஸம்பாவிதமே. ஆனல் இங்குச் சொல்லமைதியை ஆழ்ந்து நோக்குங்கால், பெரியாழ்வார் காலத்திற்கு முன்னமே ஸாதுகோஷ்டியென்றொரு ஸந்ததி ஸ்ரீவில்லிபுத்தூரில் விளங்கி வந்ததாகவே நிலையிடலாகிறது.

வடமொழி வேதத்தில் "வஸிஷ்டஸ் ஸமாநாநாம் பவதி" என்றொரு வாக்கியம் ஓதப்பட்டுவருகிறது. இதுவும் பலச்ருதி போன்றதே. இதன் பொருள் யாதெனில்; ஸமாநாநாம் மத்யே வஸிஷ்டோபவதி—தன்னேடொத்த மனிதர்களிடையில் வஸிஷ்டரென்று வ்யபதேசிக்கப்படுபவனுவான்—என்றபடி. அங்கு எப்படி ஏற்கெனவே வஸிஷ்டர்க்கு ப்ரஸித்தியுள்ளதோ, அப்படியே இங்கும் ஸாது கோஷ்டிக்கு ப்ரஸித்தியிருந்ததாகக் கொள்ளுதல் ஏற்கும். 'ஸாது கோஷ்டி' என்பதன் ஏகதேச க்ரஹணமாகவே 'ஸாது' என்கிற உபபதம் ப்ரக்ருதஜீயர் ஸ்வாமியின் பூர்வாச்ரமத் திருவம்சத்திற்கு வாய்த்திருந்தது. பகவத் கீதையில் நான்காமத்யாயத்தில் *பரித்ராணய ஸாதூநாம* என்றவிடத்தில் ஸாது சப்தார்த்தத்தை ஸ்வாமி யெம்பெருமானர் பரக்கவருளிச் செய்திருப்

பதைக் காணவேணும். அவ்வர்த்த விசேஷங்களெல்லாம் நமது ஜீயர்ஸ்வாமி திறத்திலே புஷ்கலமாயிருப்பதனால் இவ்வாச்ரமத்திலுங்கூட ஸாது ஸ்வாமியென்று பல பெரியார்கள் வ்யபதேசித்துவருவது பொருத்தமாகவேயுள்ளது.

ஸ்ரீ ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்தருளி இருபத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாகிறது. திருத்துழாய் பரிமளத்தோடே அங்குரிக்குமாபோலே நம்ஸ்வாமி ஜ்ஞான பக்திவிரக்திகளோடு கூடவே திருவவதரித்தவர் என்று பெரியார் பகரக் கேட்டிருக்கை. அடியேன் க்ரஹித்திருப்பதுமிங்ஙனேயே. ஸ்வாமியினுடைய திருநக்ஷத்ரமும் அடியே னுடைய வயதும் ஏறக்குறைய ஒற்றுமைப்பட்டதேயாதலால் ஸ்வாமியை வித்யார்த்தி தசையிலிருந்தே நன்கறிந்திருக்குமடியேனுக்கு, சில விஷயங்களை 'தர்மிக்ராஹகமாந ஸித்தம்' என்று சாஸ்த்ரஜ்ஞர் சொல்லுவதுபோல ஸ்ரீ ஸ்வாமியைப்பற்றின ப்ரதமக்ரஹ ணமே ஜ்ஞானவைராக்ய ராசியாகவாயிற்று. திருவேங்கடமுடையானுக்கு அத்தாணிச் சேவகம்செய்து போரவேணுமென்கிற காதல் ஆதியிலிருந்தே ஸ்வாமிக்கிருந்தது. திருமலை திருப்பதியில் எம்பெருமானார் காலத்திலிருந்து ப்ரதிஷ்டிதமாய் விளங்கிவருகிற கைங்கர்ய ஸாம்ராஜ்ய துரந்தர யதீந்த்ராஸ்தானம் ஸ்ரீ ஸ்வாமியால் ஸநாதமாகி இருபத்தைந்து ஸம்வத்ஸரமாகிறது. சிறிய ஜீயராஸ்தானம் பெரிய ஜீயராஸ்தானம் என்று இரண்டு ஆஸ்தானங்கள் இத்தலத்தில் ப்ரஸித்தம். சிறிய ஜீயராஸ்தானத்திற்கே முந்துறமுன்னம் பட்டாபிஷேகமாகும். அந்த ஸ்தானத்திலிருந்தே ஸமய விசேஷத்தில் பெரிய ஆஸ்தானத் திற்கு எழுந்தருள ப்ராப்தமாகும். இந்த ப்ராப்தியில்லாமே திருநாடலங்கரித்த ஸ்வாமி களுமுண்டு. அடியேனுடைய வாழ்நாளில் அப்படி இரு ஸ்வாமிகளை ஸேவிக்க நேர்ந்தது. திருநாங்கூர் ஸ்வாமியும் ஆழ்வார் திருநகரி ஸ்வாமியும்.

வர்த்தமாந பெரிய ஜீயர்ஸ்வாமி ஆறேழு ஸம்வத்ஸரமாகப் பெரிய ஜீயராஸ்தா னத்தை யலங்கரித்தருளி நித்யகைங்கர்ய ஸாம்ராஜ்ய துரந்தரராக உலகம்பரந்த புகழுடன் விளங்கிவருகின்றார். *ரூபமேவாஸ்ய ஏதந்மஹிமாநம வ்யாசஷ்டே* என்று சுடர்மிகு சுருதியோதினதற்கு ப்ரதமலக்ஷ்யமாக விளங்கியருளாநின்ற நம் ஸ்வாமியின் ஜ்ஞானபக்தி விரக்திப் பெருமைகளைப்பற்றி எத்தனை பக்கங்களெழுதினாலும் பர்யாப்தி பிறவாதடியே னுக்கு. திருவேங்கடமுடையானை நம்மாழ்வார் *நிகரில் புகழாய்!* என்று விளித்தார். நிகரில் புகழாவது வாத்ஸல்யகுணமென்று நிலையிட்டார்கள் நம்மாசார்யர்கள். வாத்ஸல்ய முள்ளவிடத்தே ஸௌசீல்ய ஸௌலப்யங்களும் தன்னடையே வந்துபுகும். இந்த முக்குணங்களும் வடிவெடுத்தவர் நம் ஸ்வாமியென்றால் இதில் விஸம்வாதம் கொள்வார் எவருமிரார். நிரதிசயமான பரத்வம் பொலியுமிடத்திலே இவைகள் சேருவது 'ஸுவர்ண கமலஸ்ய ஸௌரபோந்மேஷ:' என்னத் தகுமத்தனை. எம்பெருமானார் காலத்திலும் மணவாளமாமுனிகள் காலத்திலுங்கூட அப்பேராசிரியர்கள் பக்கலிலும் விப்ரதிபந்நர் சிலர் இருந்துவந்தார்களென்று இதிஹாஸம் வாசித்துவருகிறோம். அவ்வண்ணமாக நம் ஸ்வாமி பக்கலிலும் சிலர் விப்ரதிபத்திகொண்டிருந்தால் அது அவரவர்களினுடைய தௌர்ப்பாக்யத்தையே நிலைநாட்டி நிற்கும். ஸூரியனையும் சந்திரனையும் காண விரும்பாதாருமுளரே யுலகத்தில். ஒரு ஸமய விசேஷத்திலே சக்ரவர்த்தி திருமகனூர்க்குப் பிராட்டி பக்கலிலே ரோஷம் ஜனித்ததாக ஸ்ரீ ராமாயணத்தில் வாசிக்கிறோம். அப்போது பெருமாள் சொன்ன வார்த்தை "தீபோ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருவம்"

என்பதாம். கண்ணேய் கொண்டவனுக்கு தீபம் போலேயென்று த்ருஷ்டாந்தம் கூறியிருப்பதை நோக்குமிடத்து, ரோஷத்துக்கு ஹேதுவான தோஷம் தன்பக்கலுள்ளதே யன்றி எதிர்த்தலையிலுள்ளதன்று என்று காட்டப்பட்டதாயிற்று. அதுபோல ஸ்ரீ ஸ்வாமி பக்கலிலே வெறுப்புக்கொள்வார் ஒருவரிருவருளரேல் அது அவர்களுடைய தோஷ நிபந்தனமேயென்று அறுதியிடத் தட்டில்லை. ஸங்கல்ப ஸூர்யோதயத்திலே *மயி தத்தாவதானாயாம் விச்வதோஷாபஹாரிணு, ந சக்யமீச்வரேணுபி நிரவத்யேந வர்த்திதும்* என்று அஸூயாதேவியின் பேச்சாகவைத்திருப்பது இங்கு ஸ்மரிக்கத்தக்கது.

கோவர்த்தனகிரியை வருணிக்கும் பெரியாழ்வார் *இலைவேய் குரம்பைத் தவமா முனிவரிருந்தார் நடுவே சென்று அணுர் சொறியக், கொலைவாய்ச் சினவேங்கைகள் நின்றுறங்குங் கோவர்த்தனமென்னுங் கொற்றக் குடையே* என்றருளிச்செய்தார். மலைப்புலிகள் பர்ணசாலைகளில் தவம்புரியாநின்ற மஹர்ஷிகளின் திரளிலே சென்றனவாம்; புலிகளுக்குக் கழுத்திலே தினவுண்டென்றறிந்த அம்முனிவர்கள் அவற்றின் கழுத்தைச் சொறிந்தார்களாம்; அதனால் அப்புலிகள் பரமானந்தத்திற்குப் பரவசப்பட்டு நின்றபடியே உறங்குகின்றனவாம்: பசுக்களைப்பற்றி இங்ஙனே யருளிச்செய்திருக்கலாம்; பதினுறடி வேங்கைப் புலிகளைப்பற்றி இங்ஙனே யருளிச்செய்ததில் ஒரு சாஸ்த்ரார்த்த ஸூசனை செய்யப்பட்டதாகிறது. அதாவதென்னென்னில்; *தத் ஸந்நிதௌ வைரத்யாக:* என்பது ஒரு ப்ரஸித்தமான வசனம். அர்த்தகாமாதிநிபந்தனமாகவோ நிர்நிபந்தனமாகவோ வைரம் பூண்டிருப்பார் சிலருளரெனினும் அவர்கள் பகவத் பாகவத ஸன்னிதானங்களில் வைரம் பாராட்டாதிருப்பர்களென்பது இதன் கருத்து. இந்த சாஸ்த்ரார்த்தத்தை ஸூசிப் பிக்கவே பெரியாழ்வார் இங்ஙனேயொரு ஸூக்திவிந்யாஸம் செய்தருளிற்று. இந்தவகையில், ப்ரக்ருத ஜீயர்ஸ்வாமி திறத்தில் வைரப்ரஸக்தியுள்ளவர்களுங்கூட வைரத்தை அறவே விட்டுப் பரமபக்தியுக்தராய் வாழ்ந்து போவதைக் காணுநின்றோம். அத்தாணிச் சேவகஞ் செய்து உய்ந்துபோக வாய்ப்புள்ளவர்களும் வைரம் பூண்டு இழக்கிறுர்களென்றுல் ஒற்றைக் கொம்பு எம்பாவையங்கார் போல்வாருடைய இதிஹாஸங்களை நினைத்தே மனஸ் ஸமாதானமடைய வேண்டியதாகிறது. இது நிற்க. ... ... ❁

## திருமலையில் மடம் ஜீர்ணேத்தாரணமும் ஸம்ப்ரோக்ஷணமும்.

நம் ஜீயர்ஸ்வாமி மடம் திருமலையிலும் கீழ்த்திருப்பதியிலும் மிக விசாலமாகவுள்ளது. கீழ்த்திருப்பதியிலுள்ள மடம் ஸூபரிஷ்க்ருதமாகவேயுள்ளது. திருமலையிலுள்ள மடம் விசேஷ பரிஷ்காரஸாபேக்ஷமாயிருந்தது. இதற்காக ஸ்ரீ ஸ்வாமி இரண்டு லக்ஷம் ரூபாய் செலவு செய்வதென்று ஸங்கல்பித்து, சென்ற குரோதி ஸம்வத்ஸரம் தைமாதத்தில் திருப்பணி தொடங்கப்பட்டது, பெரும்பாலும் இடைவீடின்றியே வேலை நடந்துவந்தது. இப்போதும் ஜீர்ணேத்தாரணம் பரிபூர்த்தியடைந்தபாடில்லை. பின்புறத்திலும் முன்புறத்திலும் திருப்பணி மிகவும் சேஷித்திருக்கிறது. மத்யமபாகம் அதிவிபுல

மாகவும் பரமரமணீயமாகவும் உத்தாரமடைந்துவிட்டது. ஸ்ரீ ஜயந்திக்கு மறுநாள் உறியடி மஹோத்ஸவம் திவ்யதேசங்களெங்கும் நடைபெறுகிற ரீதியில் திருமலையிலும் நடப்பதுண்டு; அன்று திருவேங்கடமுடையான் மடத்தினுள்ளே யெழுந்தருளித் திருமண்டவப்படி கண்டருளுவது அநாதிவழக்கமாதலால் முந்துறமுன்னம் எம்பெருமானெழுந்தருளி விசேஷ கோஷ்டி கண்டருளியாயிற்று. அதுவே பர்யாப்தமான ஸம்ப்ரோக்ஷணம். ஆனாலும், ஸ்ரீ ஸ்வாமி விசாலமான திருவுள்ளங்கொண்டவராதலால் "மநோரதாநாம் அதடா: ப்ரவாஹா:" என்றபடி கரைகடந்த மநோரத ப்ரவாஹங்கள் கொண்டு, பலபல திவ்யதேசங்களிலிருந்து நூற்றுக்கணக்கான ஸ்வாமிகளை யெழுந்தருளச் செய்து உபயவேதபாராயணங்களையும் ப்ரவசனங்களையும் செய்வித்துக் களிக்கவேணுமென்றுகொண்டு நாளிட்டிருந்தார். அதாவது, ஆவணிமீ 27 தேதி முதல் 30 தேதி வரையில் (12—9—66 to 15—9—66) நடைபெறுத்த நிச்சயித்துப் பத்திரிகைகள் பிரசுரிக்கப்பட்டிருந்தன. ஸ்ரீ ஸ்வாமியின் மநோரதப்படியே ஆழ்வார் திருநகரி, வானமாமலை, நாச்சியார் திருமாளிகை, திருவரங்கம் பெரிய கோயில், திருவாலி திருநகரி, திருநாங்கூர், பெருமாள் கோயில், திருநாராயணபுரம் முதலான அனேக திவ்யதேசங்களிலிருந்து நூற்றுக்கணக்கான விலக்ஷணஸ்வாமிகள் எழுந்தருளியிருந்து ஸாமவேத யஜுர்வேத பாராயணங்களையும் அருளிச்செயல் ஸேவையையும் ஸ்ரீ பாஷ்ய பகவத் விஷயாதி படனங்களையும் சிறப்புற நடத்தினார்கள். இடையிடையில் ப்ரவசனங்களும் நடைபெற்றன.

ஸ்ரீ காஞ்சியிலிருந்து ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. அழகிய மணவாள ராமாநுஜ யதீந்த்ரப்ரவண ஜீயர் ஸ்வாமியும், ஸ்ரீபெரும்பூதூரிலிருந்து ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. சடகோப ராமாநுஜ எம்பார் ஜீயர் ஸ்வாமியும் எழுந்தருளியிருந்து கோஷ்டியை யலங்கரித்தருளினபடியால் பொலிக பொலிக வென்று காப்பிடத்தக்கதாயிருந்தது. ஜீர்ணோத்தாரண சேஷம் தைமாதத்திற்குள்ளாகவே தலைக்கட்டியாகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த ஆஸ்தானத்தின் வைபவத்தை ஸம்க்ஷிப்தமாகவாவது நம்மவர்களனைவரும் தெரிந்துகொள்ள வேண்டுவது அவசியமென்று தோன்றி, ஸ்ரீஸ்வாமி வெளியிட்டருளின பத்ரிகையிலிருந்து ஒரு சிறுபகுதி இங்குப் பிரசுரிக்கப்படுகிறது.

"குருபரம்பராப்ரபாவத்தில் ஆழ்வார் ஆசார்யர்களின் தன்னேற்றம் என்று ஸாதிக்கிற க்ரமத்தில் இந்த மடத்து ஜீயர் ஸ்வாமிகளுக்கு ஏற்பட்ட தன்னேற்றமாவது:—

எம்பெருமானார் காலம் முதலாக இடைவிடாமல் திருமலை திருப்பதி வகையரு தேவஸ்தானங்களில் எம்பெருமான்களுக்கு கைங்கர்யம் செய்துவருகையும், திருமலை திருப்பதி எம்பெருமானார் திருமேனிகளில் சாத்திக் களைந்த காஷாய த்ரிதண்டாதிகளை அவர்முன்பே ஸ்வீகரிக்கையும், ஏகாங்கிகளுக்கும் இவ்வண்ணமே காஷாயாதிகளை ப்ரஸாதிக்கையும், இரவு ஸந்நிதிகளில் திருக்காப்பு சேர்த்து திறவுகோல்கள் அனைத்தையும் எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு வந்து மடத்தில் ஸம்ரக்ஷித்துக் காலையில் எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டுபோய் சின்ன ஜீயர்—ஏகாங்கிகளோடு திருக்காப்பு நீக்கி இரவு மறுபடியும் திருக்காப்பு சேர்க்கும்வரை ஸகல கைங்கர்யங்களையும் செய்கையும், தர்மகர்த்தா என்கிற ஹோதாவில் தேவஸ்தான ஆபீசுகளில் குமாஸ்தாக்கள்

மூலமாய் ஸகல ஸம்பத்துக்களையும் பரிபாலனம் செய்கையும், எம்பெருமானுடைய அபராவதாரமான கோயில் மணவாளமாமுனிகள் திருமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடவனை மங்களாசாஸனம் செய்தருளின காலத்தில் அவர் திருவடிகளில் ஆச்ரயித்து மடத்தில் ஸிம்ஹாஸனத்தில் அவரை ஏறியருளப்பண்ணி அவரால் தம்முடைய முக்ய சிஷ்யர்களான அஷ்டதிக்கஜங்களில் ஒருவராக ஸ்வீகரிக்கப்பெற்றமையும், எம்பெருமானார் காலந்தொடங்கி இன்றளவாக பெரிய ஜீயர் மடத்தின் ஸிம்ஹாஸனம் ஸநாதமாயிருக்கையும் முதலியனவுமாம், மற்றும் பல விசேஷங்களை திருமலையனந்தாழ்வான் அருளிச்செய்த வேங்கடாசலேதிஹாஸ மாலையிலும் திருமலையொழுகிலும் கண்டு கொள்வது."—இது ஸம்க்ஷிப்தமான வைபவம்.

முற்காலத்தில் எம்பெருமானாருடைய திவ்யாஜ்ஞைகளை நிறைவேற்றுதற்கு, *லௌகிகே ஸமயாசாரே க்ருதகல்போ விசாரத:* என்னும்படி லௌகிக ஸாமர்த்யமும் பொருந்திய முதலியாண்டான் போல்வார் துணையிருந்து நிர்வஹித்தது போல நம் ஸ்வாமிக்கும் சதுரர்கள் நால்வர் துணையிருந்து ஸ்வாமிக்கு ஒருவகையான சிரமமுமின்றியே நிர்வாஹங்கள் செய்து வருகின்றார்கள். அன்னவர்களில் இருவரை இங்குக் குறிப்பிடுகிறேன்; 1. ஸ்ரீஉவே. K. L. நரஸிம்ஹாசாரியர், அட்வகேட். 2. ஸ்ரீஉவே. சக்ரவர்த்தி. ஸ்ரீநிவாஸாசாரியர்-ஸ்ரீகார்யம். இவர்களின் பொறுப்பும் பரிச்ரமமும் பாராட்டத்தக்கது.

மதுரேண ஸமாபயே. பல திவ்ய தேசங்களுக்குப் பாசுரங்கள் பாடி யநுபவித்த நம்மாழ்வார் திருமலைப் பாசுரத்தில் மட்டுமே *ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்* என்று கைங்கர்ய ப்ரார்த்தனை செய்தருளினார். பல படிகளாலும் இவ்வாழ்வாரைப் பின் செல்பவரான திருமங்கையாழ்வாரும் திருமலைப் பதிகத்திலேயே திருவேங்கடமுடையானைப்பற்றியே "அடிமைத்தொழில் பூண்டாயே" என்று ஒருகாலன்றிக்கே ஒன்பதின்காற் சொல்லிவைத்தார். இவற்றால் கைங்கரியம் செய்வது திருமலையப்பனுக்கே ஏற்குமென்று தெரிவிக்கப்பட்டதாகிறது. அநுபவத்திலும் கைங்கர்ய ஸாம்ராஜ்யம் இங்குப்போல் வேறு எங்கும் அழகுபெறுவதில்லையென்று நன்கு காண்கிறோம். *பதிம் விச்வஸ்யாத்மேச்வரம்* என்கிற ச்ருதியில் பதி சப்தத்திற்கு சேஷியென்றே பொருள் கொள்ளவேணுமென்று ச்ருதப்ரகாசிகாபட்டர் அருளிச்செய்துள்ளார். கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வமே யன்றோ சேஷித்வமென்பது. கைங்கர்ய கர்த்தாவை சேஷனென்றும் கைங்கர்ய ஸ்வீகர்த்தாவை சேஷியென்றும் கொள்ளக்கடவது. த்வயத்தில் உத்தரவாக்யத்தில் நாராயணாயவுக்கு அர்த்தமருளிச் செய்யா நின்ற பிள்ளை லோகாசார்யர் "சேஷித்வத்திலே நோக்கு" என்றருளிச்செய்தார். அங்கு விசதவாக் சிகாமணிகள் "(நாராயணபதத்தில்) ஸகல குணங்களும் ப்ரதிபாதிதமாயிருந்ததே யாகிலும் சதுர்த்த்யம்சத்தில் சொல்லுகிற வ்ருத்தி விசேஷத்துக்கு மிகவும் அந்தரங்கமாயிருப்பது சேஷித்வமாகையாலே அதிலே இப்பதத்துக்கு நோக்கு என்கை" என்றருளிச்செய்தார். ஆக இவ்வளவையும் நெஞ்சிற்கொண்டு, கைங்கர்ய ப்ரார்த்தனையைத் திருவேங்கடமுடையான் பக்கலிலேயே ஆழ்வார் செய்தருளியிருப்பதையும் குறிக்கொள்ளுமவர்களுக்குத் திருவேங்கடமுடையானுடைய த்ன்னேற்றம் அறிய வெளிதாம். இங்கே கைங்கர்ய ஸாம்ராஜ்யம் பெறுவது ஜன்மாந்தர ஸஹஸ்ரநற்றவப் பயனென்னத்தட்டில்லை. இங்குப் பெரிய ஜீயர் ஸ்வாமியாயும் சிறிய ஜீயர் ஸ்வாமியாயும் ஏகாங்கிகளாயுமிருந்து

கொண்டு ஊனுமுறக்கமுமின்றிக்கே கைங்கர்யமே கண்ணுயிருக்குமவர்களை விண்ணுளாரிலும் சீரியராகவே ப்ரதிபத்தி பண்ண ப்ராப்தம். ஸ்ரீ ராமாவதாரத்தில் *அஹம் ஸர்வம் கரிஷ்யாமி* என்று பாரித்த இளையபெருமாள் *பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே* என்று பர்வத விசேஷ நிர்தேசமே செய்திருப்பது காண்கிறோம். அவ்விளையபெருமாளுடைய திருநாமமான ராமாநுஜனென்பதையே திருமலைநம்பிகள் தமது பாகிநேயரான உடையவர்க்குச் சாற்றினர். அவர் நிர்வஹித்தருளின கைங்கரியத்தையே நம்ஸ்வாமி அந்தத் திருநாமமே பூண்டு நிர்வஹித்தருள்வது நம்போல்வார்க்கு ப்ரத்யக்ஷ பகவத் ராமாநுஜ ஸேவாபாக்ய ஸம்பத்தியாகவே கருதத் தக்கது. ❀





ஸ்ரீமத்பரமஹம்ஸ திருமலை திருப்பதி. பெரியஜீயர் ஸ்வாமி. (வர்த்தமானர்.)

### வெண்பா

சீர்வில்லி புத்தூரில் சீராற் பிறந்தருளி
ஏரார் பெரும்பூதூ ரேய்ந்துறைந்து—பார்புகழுங்
கல்விக் கடலாகிக் காருரும் வேங்கடத்துச்
செல்வனடி வாழ்வர் சிறந்து.

3

திருக்குறுங்குடி ஸ்ரீ பேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் மடம் மடாதிபதி.



48-வது பட்டம். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ ஸ்ரீ கலியன்ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி.

# திருக்குறுங்குடி. ஸ்ரீ பேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் மடம்.

## ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. 48-வது பட்டம். ஸ்ரீ கலியன் ராமாநுஜ ஜீயர்ஸ்வாமி வைபவம். (வர்த்தமான ஸ்வாமி.)

திருக்குறுங்குடி ஸ்ரீ பேரருளாள ராமாநுஜ ஜீயர்ஸ்வாமிகள் மடம் ஆஸ்தானத்தில் 46-வது பட்டத்தில் கீர்த்தி மூர்த்தியாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீ ஸ்ரீ சடகோப ராமாநுஜ ஜீயர்ஸ்வாமியின் பூர்வாச்ரம திருக்குமார ராய் கொல்லம் ஆண்டு 1190-ல் புரட்டாசிமாஸம் சதபிஷக் நக்ஷத்திரத்தில் சீர்வளரும் குறுங்கை மாநகரில் திருவவதரித்தருளினர். பூர்வாச்ரமத் திருநாமம் ஸ்ரீ வேங்கடாசார்யர். அக்காலத்தில் உபயவேதாந்த ப்ரவீணராய் எழுந்தருளியிருந்த வித்வான் ஸோமயாஜி ஸ்ரீ ரெங்கய்யங்கார் ஸ்வாமி பக்கலிலும், புத்தனேரி வித்வான். உ.வே. அஷ்டகோத்ரம் திருமலாச்சார்ய ஸ்வாமி பக்கலிலும் உபயவேதாந்தங்களை அதிகரித்தருளினர். பூர்வாச்ர மத்தில் ஸ்ரீ உ.வே. வித்வான் பெரியநம்பி கிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி என்று ஸுப்ரஸித்த ராய் திருக்குறுங்குடி திரு. ஜீயர் மடம் ஆஸ்தானத்தில் சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் மற்றும் எல்லையில்லா அறநெறிகள் யாவும் அறியக் கற்றுணர்ந்த என்ற ஸ்ரீஸூக்திக்கே இலக்கியமாகத் திகழ்ந்தவராய், 47-வது பட்டத்தில் மஹாக்கு பாளுவாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீ ஸ்ரீ பட்டர்பிரான் ஜீயர்ஸ்வாமி ஆஸ்தானமலங்கரித் தருளினவனந்தரம் இவர் மூன்று ஸம்வத்ஸரங்கள் ஸ்ரீநம்பி ஸந்நிதி ஸ்ரீகார்ய துரந்தரராக எழுந்தருளியிருந்து கார்யாதிகளைச் செவ்வனே திருத்திப் பணிகொண்டிருக்கிறார். கொல்லம் 1141-ம் ஆண்டு விசுவாவஸு வருஷம் பங்குனிமீ 28உயில் ஸ்ரீ ஸ்ரீ பட்டர்பிரான் ஜீயர்ஸ்வாமியால் துரீயாச்ரமம் ப்ரஸாதிக்கப்பெற்று பூர்வம் ஸ்வாமி திருநாடு அலங்கரித் தருளினவனந்தரம் 48வது பட்டத்தில் மடம் ஆஸ்தான நிர்வாஹகராகவும் ஸ்ரீநம்பி ஸந்நிதி ஸ்ரீபண்டார ஸ்ரீகார்ய துரந்தரராகவும், எம்பெருமானார் தரிசனத்தைத் தாழ்வின்றிக்கே பூர்ணமாக நிர்வஹித்துக்கொண்டு ஸர்வலோக சரண்யனை நம்பி எம்பெருமானுடைய திருவுள்ளமுவக்கும்படியாக ஸ்ரீநம்பி ஸந்நிதியிலும் திருமடத்திலும் திங்களும் நாளும் விழாவறுதே நித்யஸ்ரீர் நித்யமங்களமாக்கியருளி அவற்றையே பொழுதுபோக்காகக் கொண்டும் ஆச்ரிதரனைவருக்கும் ஸர்வாபீஷ்ட ப்ரதாயகராக ஸேவை ஸாதித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கிறார். நித்யஸ்ரீர் நித்யமங்களம். ... ... ❁

தாஸன், திருநாராயணன், திரு. ஜீயர் மடம்.
ஸ்ரீகார்யம்.

டில்லி ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்த ஸபையின்மூலம் ஏற்படுத்தப்பட்ட உபந்யாஸங்களைத் தவிர ஸ்ரீ ஸம்பத்குமாராச்சார் செப்டம்பர் 4-ம் தேதி காலையில் டில்லி யூனிவர்ஸிடி வேதாந்த சபையின் ஆதரவில் "பக்தியும் ப்ரபத்தியும்" என்ற விஷயத்தைப்பற்றி ஆங்கிலத்திலும், அன்று மாலை தென்னிந்திய சமாஜின் ஆதரவில் லக்ஷ்மிபாய் நகர் மதருஸி ஸ்கூலில் 'பகவத்கீதை'யைப் பற்றியும், செப்டம்பர் 5-ம் தேதி மோதிபாக் உபநகரின் 'கல்சரல் ஸொஸைடி'யின் ஆதரவில் அவதார ரஹஸ்யத்தைப்பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். ஸித்தாந்தபரமான ஒரு விஷயத்தை எளிய ஆங்கிலத்தில் விளக்குவது ச்ரமசாத்தியம். இதை வெகு சாமர்த்தியமாகவே செய்து முடித்ததால், ஸ்ரீ ஸம்பத்குமாராச்சாரின் டில்லி உபந்யாஸங்கள் எல்லாவற்றையும் கேட்கும் பாக்கியம்பெற்றவர்கள் ஒருமனதாக டில்லி யூனிவர்ஸிடியில் அவர் செய்த ஆங்கில சொற்பொழிவு எல்லா சொற்பொழிவுகளுக்கும் சிகரமாக விளங்கிற்று என்று சொன்னதில் வியப்பில்லை.

டில்லி வாசிகள் நாம் ஸ்வாமியின் ப்ரவசனங்களை மறுபடியும் கேட்டு உஜ்ஜீவிக்கத் தருணம் சீக்கிரம் வாய்க்குமாறு கீதாசாரியனை ப்ரார்த்திப்போமாக.

❁ ❁ ❁ ❁ ❁

டில்லி ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபை ஸ்ரீ வேதாந்த தேசிகனுடைய திருநட்சத்திர மஹோத்ஸவத்தை செப்டம்பர் 16ம்-தேதியிலிருந்து 25-வரை வெகு விமரிசையாகக் கொண்டாடியது. திவ்ய பிரபந்தங்கள் சேவை, வேதபாராயணம், ப்ரவசனங்கள் என்ற முறையில் தினப்படி நிகழ்ச்சிகள் இருந்தன. அஹோபிலமடம் ஆஸ்தான வித்வான் ஸ்ரீ நரசிம்மராகவாச்சார் ஸ்வாமிகள் சம்பிரதாய விஷயங்களைப்பற்றிய உபந்யாஸங்கள் செய்து டில்லி ஸ்ரீவைஷ்ணவ சமூகத்தை பத்து நாட்கள் மகிழ்வித்தார். உத்ஸவமும் ஸ்ரீ R. வரதராஜ அய்யங்கார் ஸ்வாமி க்ருஹத்தில் ஏற்பாடு செய்யப்பட்டு நடந்தது. சாத்துமுறையன்று உபன்யாஸக ஸ்வாமிக்கு சன்மானம் வழங்கப்பட்டது. சபையின் உபதலைவர் ஸ்ரீ R. வெங்கடேச அய்யங்கார், ஸ்வாமிக்கு சபையின் சார்பாக க்ருதக்ஞதையை தெரிவித்தார். உத்ஸவம் விமரிசையாக நடக்க விசேஷ முயற்சிகள் எடுத்துக் கொண்ட சபையின் மற்றொரு உபதலைவரான ஸ்ரீ P. V. S. அய்யங்காரைப் பாராட்டாமலிருக்க முடியாது. அவருடைய ஒத்துழைப்பினால் எல்லாம் மிக நன்றாக நடைபெற்றது.

இங்ஙனம்,

**A. ராமாநுஜாசாரி, B.A.,**

New Delhi-11.

---

**வேதவேதாந்தவர்த்தினியின் நிகழ்ச்சி.** திருவல்லிக்கேணியில் விளங்கும் இந்த ஸபையின் 98-வது வருஷக் கொண்டாட்டம் 28—9—66 முதல் 2—10—66 வரை ஐந்து நாட்கள் திருவல்லிக்கேணியில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. நான்கு நாட்கள் ஸ்ரீ வானமாமலைமடத்தில் வித்வான்களின் உபந்யாஸங்கள் நடைபெற்றன. 2—10—66 ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி திருமுன்பே உபயவேத ஸ்தோத்ராதி பரீக்ஷைகளும் பரிசளிப்பும் உபந்யாஸமும் நடைபெற்று நிறைவேறிற்று. (ரிடையர்ட் ஜட்ஜ்) ஸ்ரீ உவே. P. M. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியும், (அட்வகேட்) ஆசால். சேஷாசாரியர் ஸ்வாமியும் வழக்கம்போல் முன்னின்று நடத்திவைத்தார்கள். (ந. நி.)

# ஸ்ரீஉவே. T. A. ஸம்பத்குமாராச்சாரியாரின் டில்லி விஜயம்.

வட இந்தியாவில் குஜராத், ராஜஸ்தானம் முதலிய பிராந்தங்களில் சிஷ்யாநுக்ரஹார்த்தமாக யாத்திரையில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமி உவே T. A. ஸம்பத்குமாராச்சாரியார்ஸ்வாமி கடந்த ஆகஸ்டு செப்டம்பர் மாதங்களில் டில்லிக்கெழுந்தருளி பல ப்ரவசனங்களைச் செய்து தலைநகரின் ஸ்ரீ வைஷ்ணவர்களைப் பரவசப்படுத்தினர்.

ஸ்ரீ ஸம்பத்குமாராச்சாரியர் ஸ்ரீ காஞ்சி மஹாவித்வான் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராச்சார்ய ஸ்வாமியின் ஜ்யேஷ்ட ஜாமாதா என்றுமட்டும் இங்குள்ள பலருக்குத் தெரியுமேயொழிய அந்த ஸ்வாமியின் ஸ்வய மதிப்பைத் தெரிந்துகொள்ளும் தருணம் இதுவரை வாய்க்கவில்லை. ஸ்ரீ ஸம்பத்குமாராசாரியர் இங்கிலீஷ், ஸம்ஸ்கிருதம், தமிழ், குஜராதி, கன்னடம், ஹிந்தி இப்பாஷைகளில் உயர்ந்த பாண்டித்தியம் பெற்றவர்; ஸம்பிரதாய கிரந்தங்களில் ஆழ்ந்த ஞானம் வாய்ந்தவர்; உயர்ந்த பாணியில் உபந்யாஸம் செய்யும் திறமை பெற்றவர். மேலே குறித்த ஒவ்வொரு பாஷையையும் ஸொந்த பாஷையாகக் கையாள்பவர்.

ஸ்ரீ ஸம்பத்குமாராசாரியாரை நேரில் காண்பவர் அவருடைய ஸன்னிவேசத்திலிருந்து—அவருடைய விசால பன்னிரண்டு திருமண் காப்புகள், பஞ்சகச்ச வேஷ்டி, கழுத்தில் திருமணி மாலைகள் இவைகளிலிருந்து—இவர் M. A. பாஸ் செய்துள்ளவராக இருக்கக் கூடுமென்று ஊகிக்கவும் ப்ரமேயமில்லை! இவர் 'வித்வான்' பரீக்ஷையிலும் தேர்ந்தெடுக்கப்பட்டவர். ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபம் பல ஆவிருத்திகள் செய்த பெருமை படைத்தவர். விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை எளிய நடையில் ஸாதாரண ஜனங்களும் புரிந்து கொள்ளும்படி விளக்கக்கூடிய ஸாமர்த்தியம் வாய்ந்தவர்.

ஸ்வாமி தலைநகருக்கெழுந்தருளப் போகிறார் என்று தெரிந்ததும் டில்லி ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்த ஸபை இங்குள்ள பல உபநகரங்களில் இவருடைய சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்தது. ஸ்வாமியின் முதல் உபந்யாஸம் லோதி காலனியில் ஆடி ச்ரவணத்தன்று (29-8-66) "ஸ்ரீ நிகமாந்த குருவும் ஸ்ரீ வைஷ்ணவமும்" என்ற விஷயத்தைப்பற்றி நிகழ்ந்தது. இப்ப்ரவசனத்தில் அவர், எம்பெருமானாருடைய ஸ்ரீ பாஷ்யத்துக்குக் காப்பாக ஸ்வாமி தேசிகன் பல க்ரந்தங்களை இயற்றி குதிருஷ்டிகளையும் விசிஷ்டாத்வைத விரோதிகளையும் வாய்திறக்கவொண்ணாதபடி செய்த ஆனைத்தொழில்களை அற்புதமாக விளக்கினர்.

செப்டம்பர் 1, 2 தேதிகளில் ராமகிருஷ்ணபுரத்தில் 'பகவத்கீதையின் சாரம்' 'திருப்பாவை' என்ற விஷயங்களைப்பற்றியும் 3-ம் தேதி 'ஸ்ரீ வரவரமுனிகளும் ஸ்ரீ வைஷ்ணவமும்' என்பதைப்பற்றி கரோல்பாக்கிலும் அத்புதமான ப்ரவசனங்கள் செய்தார். இந்த கடைசி உபந்யாஸத்தில் ராமாநுஜ ஸித்தாந்தத்தை ஆங்காங்கு ஆழ்வார் திவ்யப்பிரபந்தங்கள் (முக்கியமாக ஈட்டுப் பிரவர்த்தனம்) மூலம் ஸ்ரீ வரவரமுனிகள் ஊர்ஜ்ஜிதப்படுத்தினதை எடுத்துரைத்து விசதவாக்சிகாமணியின் வியாக்கியானங்கள் அவதரித்திராவிட்டால் ஸ்ரீ வசனபூஷணம் போன்ற ரஹஸ்ய க்ரந்தங்களின் பெருமையையும் உபயவேதாந்த தத்துவங்களையும் தெரிந்துகொள்ளும் பாக்கியம் உலகமிழந்திருக்குமென்பதை பரக்க விளக்கினர் ஸ்ரீ ஸம்பத்குமாராச்சார்யர்ஸ்வாமி.

# தென்னரங்கர்செல்வம் முற்றும் சிதைந்ததென்னவேண்டிற்றே!

இங்கே ஸேவை ஸாதிக்குமொரு திவ்யகோஷ்டியை ஸ்ரீ ராமாநுஜன் நெ. 209-ல் ஸேவித்திருக்கிறீர்கள். இந்த கோஷ்டிக்குத் தலைவரான கோயில் ஸ்ரீ உவே. பண்டிதராஜ: மெ ஸுந்தரராஜாசார்ய ஸ்வாமியை ஸ்ரீ வைகுண்டநாதன் கொள்ளைகொண்ட பரிதாபம் கடலில் மிகப் பெரிது. புரட்டாசிமீ 3உ (19—9—66.) சுக்லபக்ஷஷஷ்டி திங்கட்கிழமை யன்று இந்த ஸ்வாமி திருநாடலங்கரிக்க ப்ராப்தமாய்விட்டது. இச்செய்தி கேட்போ ரனைவரும் *"ஹா திக் கஷ்டமநிஷ்டமஸ்தகருண: கோயம் விதே: ப்ரக்ரம:!"* என்று துடிக்கவேண்டியிருக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. ஸ்ரீ வைஷ்ணவவுலகில் இந்த ஸ்வாமியை யறியாதார் எந்த நாட்டிலுமிரார்கள். தென்னாடும் வடநாடும் பரந்த புகழுடை யவர். ஸம்ஸ்க்ருத பாண்டித்யமேயன்றிக்கே ஜ்யோதிஷம் ஆயுர்வேதம் மந்த்ரசாஸ்த்ரம் முதலானவற்றிலும் ஆழ்ந்த அவகாஹன முடையவர். ஸ்ரீரங்கம் பஞ்சாங்கம் என்று ஜகத் ப்ரஸித்தமாக எங்கும் பரவியுள்ள பஞ்சாங்கம் இவருடைய ஸ்ரீவிலாஸ முத்ராக்ஷரசாலையில் பதிப் பிக்கப்பட்டு வந்ததென் பதுமட்டுமல்லாமல் அந்த நிர்வாஹப் பொறுப்பும் இவருடையதாகவேயிருந் தது. "ஜ்யோதிஷ ஸர்வ விஷயாம்ருதம்" என்னும் பெயரால் இவர் இயற்றிய மஹாக்ரந்தம் இவர்க்கு ஜ்யோதிஷரத்னம் என்கிற பிருதை அன்வர்த்தமாக்கியுள்ளது.



இத்தகைய பல விஷயங்களை அடியேனெழுதி உலகுக்குத் தெரிவிக்கவேண்டிய அவசியமில்லை. இந்த ஸ்வாமிக்கு ஷஷ்டியப்தபூர்த்தியும் நடைபெறவில்லை. ஐம்பத் தெட்டாவது திருநக்ஷத்திரத்தில் இந்த விபூதியை விட்டுவிலகினர். இவருடைய திருத் தகப்பனரான ஸ்ரீமத். செய்யுவாசார்ய ஸ்வாமி எழுபது திருநக்ஷத்திரங்களுக்குமேல் எழுந்தருளியிருந்து கோயிலில் அனேக பர்யாயம் ஸ்ரீ பாஷ்ய பகவத்விஷய ரஹஸ்யாதி ப்ரவசனங்கள் செய்து போந்தார். தீபாதுத்பந்ந ப்ரதீபமென்னும்படியாக அந்த ஸ்வாமியிற் காட்டிலும் விஞ்சி அபரிமித யோக்யதைகள் பெற்றிருந்த இந்த ஸ்வாமியை இப்போதே திருவடி சேர்த்துக்கொண்ட ஸ்ரீரங்கநாதனைப்பற்றி நாம் என்னவென்று சொல்லுவது. 'நிரங்குச ஸ்வதந்திரன்' என்று தான் படைத்த விருதைப் பரிபாலித்துவருகிறான் என்னலா மத்தனை. ஸ்வாதந்த்ரியத்தினால் அவன் எது செய்தாலும் அவனை தயாளுவென்றே

போற்றவேண்டிய குடியிலே நாம் பிறந்திருக்கிறோம். இந்த ஸ்வாமியின் வியோகத்தினால் ஸ்ரீரங்கஸ்ரீ பலபடியாலும் குறையுற்றதென்றால் இதில் ஈஷத்தும் அதிசயோக்தியில்லை.

இந்த ஸ்வாமியினுடைய நட்பு அடியேனுக்கு முப்பத்தைந்து வருடங்களுக்கு மேலாகவேயிருந்தது. அடியேனுடைய நூல்களில் ஐம்பது நூல்களுக்கு மேலாகவே இந்த ஸ்வாமியால் கேவலம் லோகோபகாரார்த்தமாகவே அச்சிடுவிக்கப்பட்டவை. அம்ருதலஹரீபத்ரிகையும் அடியேனுக்காகவே இருபதாண்டுகட்குமேல் நடத்திவந்தார். மூன்று நான்கு ஆண்டுகட்குமுன்பு அச்சுக்கூட நிர்வாஹத்தில் சிறிது சிரமம் ஏற்பட்டதனால் அதை நிறுத்த நேர்ந்தது. ஆனாலும் விரைவில் மீண்டும் தொடங்கித் தொடர்ந்து நடத்திவரவேணுமென்றே மனோரதித்திருந்தார். அதற்குள்ளே *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி* என்று அவரே அம்ருதமாய்விட்டார். *ஸா ஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்* என்கிற அம்ருத ஸ்ரீயைப் பெற்றுவிட்டார். திருமேனி பாங்கில்லாமலிருந்த காலம் அதிகமில்லை. 'ஆரோக்யக்குறைவு' என்று ஸ்ரீமுகம் கிடைக்கும்; 'ப்ரவசனம் நடந்துகொண்டேயிருக்கிறது' என்கிற கடிதமும் அந்தேவாஸிகளிடமிருந்து வந்து கொண்டிருக்கும். ஒருவரும் எதிர்பாராதபடி நேர்ந்த இந்த ஸம்பவம் விசேஷித்து ஸ்ரீரங்கவாஸிகளுக்கெல்லாம் அப்ரதீகாரபருஷமான பரிதாபஸ்தானமே. இந்த ஸ்வாமியினுடைய ஸ்தானத்தைப் பூர்த்திசெய்யவல்ல வ்யக்திவிசேஷம் நம் போல்வாருடைய புத்திக்கு எட்டவில்லை. ஸ்ரீரங்கநாதன் திருவுள்ளமுகந்து *ஸ்ரீரங்கச்ரியம் அநுபத்ரவாம் அநுதினம் ஸம்வர்த்தய து.

இவர்க்குப் புருஷஸந்ததியையோ ஸ்த்ரீஸந்ததியையோ எம்பெருமான் ஸங்கல்பிக்கவில்லை. தம்முடைய உடன்பிறந்தாளின் செல்வப் புதல்வனை ஸ்வீகாரம் செய்துகொள்ள வேணுமென்று கருதிச் சிலகாலமாகக் கூடவே வைத்துக்கொண்டிருந்தார். அசிந்தித ஸம்பவத்தினால் அது நிறைவேறப் பெற்றதில்லை. ஏகாஹம் கழித்த மறுநாள் அக்குமாரனையே தேவியார் ஸ்வீகாரம் செய்துகொண்டு அவனுடைய கர்த்ருத்வத்தின் கீழ் கைங்கர்யசேஷம் தலைக்கட்டியது. *நிநாந்தே நிஹிதம் தேஜஸ் ஸவித்ரேவ ஹுதாசந:* என்ற கணக்கிலே ஆயுஷ்மாந் ஓங்கி வளர்க.

### ஸ்வாமியின் சரமச்லோகமாலிகை.

அப்தே பாதி பராபவே திநமணௌ கந்யாம் கதே பாண்டரே
பக்ஷே ஷஷ்டிதிதௌ ஹிமார்சுதிவஸே தாரே நுராதாபிதே,
கௌண்டிந்யாந்வயவார்த்திகௌஸ்துபமணி: ஸ்ரீஸுந்தரார்யஸ் ஸுதீ:
வேதாந்தத்வயபாரகோ நிஜகுரோர் பேஜே பதாம்போருஹம்.

பராபவாப்தே கந்யாயாம் சுக்லஷஷ்ட்யாம் விதோர் திநே.
கௌண்டிந்யஸுந்தராசார்ய: ஸ்வாசார்யசரணாவகாத்.

ஸ்ரீரங்கஸாம்ராஜ்யநிதாநபூதம் ஸத்ஸம்ப்ரதாயாம்ருத ஸாரஸிந்தும்
வித்வந்மணிம் ஸுந்தரராஜஸூரிம் பச்யேம ஹாஹந்த கதா நு பூய:.
ஸகலஸத்குணஸந்ததிமந்திரம் நிகிலலௌகிகவைதிக துர்வஹம்.
விபுதஸுந்தரராஜமஹாகுரும் திசிதிசீஹ ஸதைவ விலோகயே.



# லௌகிகப்பெரியாரின் மறைவு.

"பரிவர்த்திநி ஸம்ஸாரே ம்ருத: கோ வா ந ஜாயதே, ஸ ஜாதோ யேந ஜாதேந யாதி வம்சஸ் ஸமுந்நதிம்." என்கிற ஸுபாஷிதத்திற்கு ப்ரதமலக்ஷ்யமாயிருந்த மஹான்—உலகம் நிறைந்த புகழாளர்—ஜ்ஞானவ்ருத்தர் சீலவ்ருத்தர் வயோவ்ருத்தர் என்னும்படியான எல்லாப் பெருமைகளும் வாய்ந்தவர்—ஸகலவிதமான அதிகாரபதவிகளையும் வஹித்தவர்—பூலோகத்தில் ஒரு ஸூர்யனெனத் திகழ்ந்தவர்—ஸகல விருதுகளுக்கும் கொள்கலமானவர் ப்ரஹ்மஸ்ரீ. C. P. ராமஸ்வாமி ஐயரென்பவர் லண்டனில் அநாயாஸமாக அஸ்தமித்தனர். அவருடைய புதல்வர் மூவர் விளக்கில் கொளுத்தின தீவட்டிபோல் விளங்குகின்றார்கள். இம்மஹானுடைய பிரிவினால் நமது பாரதநாட்டிற்கு அபரிமிதமான நஷ்டமுண்டெனினும், இஹலோகத்துச் செல்வங்களையெல்லாம் நிரவதிகமாக ஆண்ட இம்மஹரியோர் பரலோகத்துச் செல்வமாளவேண்டியதும் ப்ராப்தமேயென்று மனச்சாந்தி பெறுகின்றதுலகம். ... ... ...



# Letters - கடிதங்கள்

முன்குறிப்பு:— சென்ற ஸ்ரீராமாநுஜனில் (214 இதழில்) விலக்ஷணஜக துபகார மென்னும் மகுடம் புனைந்த நீண்டதோர் வியாஸத்தில் சில பலவித்வான்களின் வியாஸங்களிலுள்ள அஸமஞ்ஜஸத் தன்மைகள் விவரிக்கப்பட்டிருந்தன. எந்த விஷயத்தையும் மனச்சாட்சியை மீறி நாம் எழுதுவதில்லை யாதலால், ஔசித்ய பூர்ணமாயும் அநுபபத்தி லவலேச விரஹிதமாயுமேயிருக்குமாதலால் தடஸ்தர்களான பண்டிதோத்தமர்கள் இதில் எவ்விதமாகத்திருவுள்ளம்பற்றுகிறார்களென்று நாம் எதிர்பார்க்கிற வழக்கமே கிடையாது. ஆனாலும் பல மஹான்கள் தங்களுடைய ஆத்மானந்தத்தைக் கடித மூலமாகத் தெரிவித்திருந்தார்கள். [கடிதமென்று சொல்லலாகாது, ஸ்ரீமுகமென்ன வேணும்.] இருபத்தைந்து ஸ்ரீமுகங்களுக்கு மேல் வந்திருந்தாலும் இரண்டைமட்டும் இங்குப் பிரசுரிக்கிறேன்....

ஸ்ரீமதுபயவே. ராமாயணபூஷணம், ராமாயணும்ருதவர்ஷி, உபந்யாஸகேஸரி, வித்வான். கோமல். சேஷாத்ரியாசார்யஸ்வாமியின் ஸ்ரீமுகம். (ஸைதாபேட்டை)

... ... ... ப்ரணிபத்ய விஜ்ஞாபயதி தாஸ:. ஸ்ரீராமாநுஜன் 214, கிடைத்தவுடனே வழக்கம்போல் ஆபாதசூடம் ஒரு முறை ஸேவித்து முடித்தேன். மறுபடியும் ஊன்றிஸேவிக்க வேணுமென்று தோன்றி ஸேவித்தேன். மிகவும் ஆஸ்வாத்யம் என்று தவிர வேறு என்ன எழுதுவேன். விஷயங்களை ஸ்வாமியே நேரில் ஸாதிப்பது போன்ற உணர்ச்சியுண்டாயிற்று. ... ... ... ஸ்வாமியின் ஸந்நிதியில் அந்தரங்கமாய் அடியேன் பல ஸமயம் விஜ்ஞாபிப்பதுண்டே — ஆழ்வார்களும், பூர்வாசாரியர்களும் ஒருங்கே அநுப்ரவேசம் செய்த ஓர் அத்புதமான அவதாரம் ஸ்வாமியென்று. அது, ஸ்வாமி ஸாதிக்கும் ஒவ்வொரு விமர்சங்களையும் வியாஸங்களையும் ஸேவிக்கும்போது ஸத்யம் ஸத்யமென்ன வேண்டியதாகிறது. ... ... தற்காலம் ஸ்வாமி திருமேனியிலிருக்கும் அசக்தி நீங்கிப் பரிபூர்ணசக்தியுண்டாகி இத்தகைய விலக்ஷண ஜகதுபகாரங்களை விசேஷித்துச் செய்தருள பல்லாண்டு பல்லாண்டு லீலாவிபூதியை அலங்கரித்தெழுந்தருளியிருக்க வேண்டுமென்று சக்ரவர்த்தி திருமகனுரைப்ப்ரார்த்திக்கும்.

27—9—66. தாஸன், கோமல். சேஷாத்ரி.

(ஒருசிறு விண்ணப்பம்) இந்த ஸ்ரீமுகத்தில் ஸ்வாமியினுடைய அந்தரங்கவுகப்புமட்டும் அடியேனுக்கு உத்தேச்யமேயொழியை "ஆழ்வார்களும் பூர்வாசார்யர்களும்" இத்யாதியை ஹார்த ப்ரேம பரீவாஹரூப அத்யுக்தியென்றே கொள்வேன். (ப்ர–அ.)

(இரண்டாவது ஸ்ரீமுகம்.) ஸ்ரீமதுபயவே T. A. தாதாசாரியர்ஸ்வாமி, அட்வேகேட். (கள்ளக்குரிச்சி-30—9—66.)

ஸ்ரீமதாசார்யஸார்வபௌமஸ்வாமி ஸன்னிதியில் அடியேன் செய்யும் விண்ணப்பம். ... ... ... ஸகலக்ருத்யங்களையும் ஸவாஸனமாக விட்டு சரணமே சரணமென்றிருக்கு மடியேனுக்கு ஸ்ரீராமாநுஜன் அனுபவமே தாரக போஷக போக்யங்கள் எல்லாமுமாக இருந்து வருகிறதென்பதை நித்யமும் ஒருமுறை எழுதிக்கொண்டிருந்தாலும் அடியேனுக்கு த்ருப்தி பிறவாது. பசித்தவன் பழங்கணக்கு பார்க்கிறதென்று ஒரு வசனமுண்டே. அந்தரீதியில் பழைய ராமாநுஜன் பத்ரிகைகளையும் எடுத்து வாசிப்பேன். ஒவ்வொன்றையும் அபூர்வவத் விஸ்மய மாததாநமென்றே சொல்லவேண்டியிருக்கிறது. எதுவும் முன்பு பார்த்ததாகத் தோன்றுவதேயில்லை, ஒவ்வொன்றையும் நாலைந்து தடவைக்குக் குறைவாக வாசிப்பதில்லை; அப்படியிருந்தும் நித்யாபூர்வமாகத்தானிருக்கிறது. ஸ்ரீராமாநுஜன் 214 கிடைத்து ஒரு மாதமாகியும் இதுவரை அதைப்பற்றி விஜ்ஞாபனம் செய்யாததற்கு மூன்னம் க்ஷமையை வேண்டுகிறேன். வித்யாபரிச்ரமபரீக்ஷையென்னும் வியாஸம் ஒவ்வொரு வித்வான்களும் பார்ப்பதற்கு யோக்யமேயல்லது வேறு என்ன செய்யக்கூடும். வித்யைகளில் பரிச்ரமப்படவேண்டிய விதங்கள் இப்படியிப்படிருக்கிற தென்று ஸாமான்யமாகத் தெரிந்து கொள்ளலாம். இப்படி பரீக்ஷைக்கு யோக்யமாகப் பரிச்ரமப்பட்டவர்களைத் தேடிப்பிடிக்க வேண்டித்தானிருக்கிறது. "சப்தமஞ்ஜரியை ஏழெட்டு வயதில்வாசித்தபடியால் அதில் கேள்வி கேட்காமல் மஹாபாஷ்யத்தில் ஏதாவது கேட்டால் சொல்லுகிறேன்" என்று தேவரீருடைய திருத்தகப்பனரிடம் ஒரு மஹா பாஷ்யாந்த பண்டிதர் சொன்னதை உத்தரதேசயாத்திரையில் ஒருதரம் நேரில் ஸாதிக்கக் கேட்டு ஒரு நாள் பூராவும் சிரித்தேயிருந்தேன். அதை இப்போது பத்ரிகையில் வாசித்து இன்னமும் சிரித்துமாளவில்லை. ... ... விலக்ஷணஜகதுபகாரமென்னும் வியாஸத்தை அடியேனுடைய பேரப்பிள்ளைக்கு சந்தை சொல்லிக் கண்ட பாடமாக்க வேணுமென்று தோன்றிற்று. இதைப்பற்றி அடியேன் விஸ்தாரமாக எழுதி ஸ்வாமியின் அனர்க்கமான அவகாசத்தைப் பாழ்படுத்த நினைக்கவில்லை. ஸம்க்ஷேபமாக விஜ்ஞாபிக்கிறேன். மஹா மஹோபாத்யாய சாமிநாதய்யரவர்களிருந்தால் இதை வாசித்துக் கூத்தாடுவர். ஸ்வாமி உபயபாஷைகளிலும் எழுதிவரும் வியாஸங்களையும் வியாக்கியானங்களையும் வாசியாத வித்வான்கள் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஆனால் அதுவெல்லாம் அவரவர்களுக்கு உபந்யாஸங்களுக்குப் பயன்பட்டு வருவது தவிர எழுதுகிற வழிக்கு ஈஷத்தும் உபயோகப்படவில்லையேயென்று தான் அடியேனுக்கு நிர்வேதம். மசியும் எழுதுகோலும் காகிதமும் இருக்கிறதென்று எழுத முன்வரும் வித்வான்கள் தேவரீருடைய உபதேச மொழிகளைப் பொன்னேபோல் போற்றவேணுமென்று ப்ரார்த்தித்து நிற்கிறேன். தேவரீர் அடுத்தடுத்து எவ்வளவு எழுதினாலும், ப்ரும்ஹம், ஸிஹ்மம், உபப்ரஹ்மணம்...... என்றுதான் எழுதிக்கொண்டிருக்கப்போகிறீர்கள். 'வ்யாஸமஹர்ஷியும் வைஷ்ணவமும்' என்கிற வியாஸமெழுதின மஹான் யாரோ தெரியவில்லை. அந்த மஹான் உண்மையில் விவேகியாயிருந்தால் ஸ்வாமியிடத்தில் மிகவும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டவர்.

தாஸன், ஆராவமுதுதாதாசாரி.

# அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்த நிதியில்
# 9. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் பதினெட்டு.

ஸ்ரீ ராமாநுஜன் 204ல் (ஸ்ரீ ராமாநுஜனுக்குப்) பதினேழாவது ப்ராயம் பூர்த்தியாகி 205ல் பதினெட்டாவது ப்ராயம் தொடக்கமானதை முன்னிட்டு, அதற்கு ஸ்ரீழி ஞாபக சின்னமாக வெளியிடத் தொடங்கின அஷ்டாதசாஷ்டாதச மஹார்த்தநிதியில் கீழ் ஸஞ்சிகைகளில் வெளியிடப்பட்டவை—(1) வேதஸம்ஹிதையில் 18. (2) வேதப்ராஹ் மணத்தில் 18. (3) ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தில் 18. (4) பகவத்கீதையில் 18. (5) பூர்வா சார்யக்ரந்த விவரணம் 18. (6) ராமாநுஜனும் ராமாநுஜரும் 18. (7) மநுஸ்ம்ருதியில் 18. (8) ஸ்ரீ ராமாயணத்தில் 18. ஆக எட்டு பதினெட்டுகளே. சேஷித்துள்ளவை பத்து பதினெட்டுகள். ஸ்ரீ ராமாநுஜனுக்குப் பதினெட்டாவது ப்ராயம் விரைவில் பூர்த்திபெற விருப்பதால் வேறு வியாஸங்களுக்கு அவகாசம் கொடாமல் இந்த அஷ்டாதச மஹார்த்த நிதியையே பூர்த்திசெய்ய ஸங்கல்பித்து ஒன்பதாவது பதினெட்டு உபக்ரமிக்கலாகிறது. ❋

## 1. புராணப்ரசம்ஸையும் ஸ்ரீ விஷ்ணுபுராணச் சிறப்பும்.

நாம் ஆதரிக்கவேண்டிய ப்ரமாண வர்க்கங்களைப் பேசுமிடத்து "ச்ருதிஸ்ம் ருதீதிஹாஸ புராணாதிகள்" என்கிறோம். காடகச்ருதியில் "இதிஹாஸபுராணஞ்ச...... ஸர்வாஸ தா:" என்று ஓதப்பட்டுவருவதால் ச்ருதிகள் போலவே இதிஹாஸ புராணங் களும் ப்ரபல ப்ரமாணங்களென்று கொள்ளத் தட்டில்லை. *இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ர்ம்ஹயேத்* என்கிற வசனம் ப்ரஸித்தம். இதிஹாஸ புராணங்களைக் கொண்டே வேதத்தின் பொருளை அறுதியிடவேணுமென்பது இதன் கருத்து. இதிஹாஸ புராணங்களின் உதவியைக் கொள்ளாமல் வேதப்பொருள் கூறத் தொடங்குமவன் அல்பச்ருதனெனப்படுகிறான். அன்னவனைக்கண்டு வேதமாது நடுங்குகின்றதாம். எதனு லென்னில்; அல் ச்ருதனானவிவன் வேதார்த்தம் கூறுகிறேனென்றிழிந்து வாய்வந்தபடி யெல்லாம் பிதற்றி என்னை வஞ்சிக்கப் போகிறானேயென்று அஞ்சுகின்றதாம். வேதப் பொருளை விளக்கக் கருதிய மஹர்ஷிகள் பராவரதத்துவங்களைக் கையிலங்கு நெல்லிக்கனி யாகக் கண்டு பரமகாருணிகர்களாய் பகவானுடைய ப்ரேரணைகொண்டே ஸ்ம்ருதி. இதிஹாஸ. புராணங்களை இயற்றினார்கள். அவற்றுள் ஸ்ம்ருதிகள் வேதத்தின் பூர்வபாக மான கர்மகாண்டத்திற்கு உபப்ர்ம்ஹணங்களாய்த் தோன்றியவை. மநு அத்ரி யாஜ்ஞ வல்க்யாதி மஹர்ஷிகள் இயற்றிய தருமசாஸ்த்ரங்களென்னுமவையே ஸ்ம்ருதிகளாம். இதிஹாஸ புராணங்கள் வேதத்தின் உத்தரபாகமான உபநிஷத்துக்களுக்கு [வேதாந்தத் திற்கு] உபப்ர்ம்ஹணமாய்த் தோன்றியவை. கர்மகாண்ட வியாக்கியானங்களான ஸ்ம்ருதிகளிற்காட்டில் இதிஹாஸ புராணங்கள் மிகச் சிறந்தவை. ஸர்க்கம், ப்ரதிஸர்க்கம்,

வம்சம், மந்வந்தரம், வம்சாநுசரிதம் என்னுமிவற்றை ப்ரதிபாதனம் செய்யுமவை புராணங்கள். இவற்றுள், ஸர்க்கமாவது—ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும் நடக்கிற ஜகத்ஸ்ருஷ்டி. ப்ரதிஸர்க்கமாவது—நித்யநைமித்திக ப்ராக்ருதரூபமான ப்ரலயம். ஸ்தூல சிதசித் விசிஷ்டப்ரஹ்மமானது ஸூக்ஷ்மசிதசித் விசிஷ்ட ப்ரஹ்மமாகும் நிலை அது; வம்சமாவது ஆதிஸ்ருஷ்டியில் ப்ரவ்ருத்தர்களான மஹாபுருஷர்களின் ஸந்தான வரிசைகள். மந்வந்தரங்களாவன நான்முகனாலே ஸ்ருஷ்டி வ்யாபாரத்தில் அதிகரிக்கும்படி செய்யப்பட்ட ஸ்வாயம்புவ ஸ்வாரோசிஷாதிகளின் வியாபாரம். வம்சாநுசரிதமாவது சில புண்யச்லோகர்களின் சரித்ராநுவர்ணனம். (இதிஹாஸங்களின் பரிஸ்திதி இப்படிப்பட்டதன்று.) புராணங்கள் வைஷ்ணவநாரதிய பாகவதாதிகளாகப் பதினெட்டு மஹாபுராணங்களெனப்படும். வேறு பல உபபுராணங்களுமுள்ளன. இவையெல்லாம் கல்பபேதத்தாலே ஸத்வரஜஸ் தம: ப்ராசுர்யம் காரணமாக ஸாத்விக ராஜஸ தாமஸவ்யபதேசங்களையடைகின்றன. இவற்றுள் ராஜஸதாமஸங்களைப் பரித்யஜித்து ஸாத்விகங்களையே பரிக்ரஹிக்கவேணுமென்று பரத்வாஜமஹர்ஷி சொல்லிவைத்தார். *வேதேஷு பௌருஷம் ஸூக்தம் தர்மசாஸ்த்ரேஷு மாநவம்; பாரதே பகவத்கீதா புராணேஷு ச வைஷ்ணவம்* என்கிற ப்ரமாணவசனத்தினால்—வேதங்களுக்குள் புருஷஸூக்தம் சிறந்ததென்றும், ஸ்மிருதிகளுள் மநுஸ்மிருதி சிறந்ததென்றும், மஹாபாரதத்தினுள் பகவத்கீதை சிறந்ததென்றும், புராணங்களுக்குள் ஸ்ரீ விஷ்ணுபுராணம் சிறந்ததென்றும் தெரிவிக்கப்படுகிறது. ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் *தத்வேந யச் சிதசிதீச்வர தத்ஸ்வபாவ போகாபவர்க்க ததுபாயகதிருதார:, ஸந்தர்சயந் நிரமிமீத புராணரத்னம் தஸ்மை நமோ முநிவராய பராசராய.* என்று நம்மாழ்வாரோடொப்ப பராசரமஹர்ஷியை உபச்லோகித்திருக்கையாலே தத்ப்ரோக்தமான ஸ்ரீ விஷ்ணுபுராணம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு விசிஷ்ய உபாதேயமாகக் கடவது. இதில் உபஜீவ்யங்களான அர்த்தங்கள் அபரிமிதங்களாயிருக்கச் செய்தேயும் ப்ரகிஜ்ஞைக்குச் சேரப் பதினெட்டே கொள்ளுகிறோமிங்கு.

## 2. ஸ்ரீ விஷ்ணுபுராணத்தின் ஸகலார்த்தபௌஷ்கல்யம்.

பகவத்கீதை க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதமாக அவதரித்ததுபோலவும், ஸ்ரீ ராமாயணம் வால்மீகிநாரத ஸம்வாதமாக அவதரித்ததுபோலவும் ஸ்ரீ விஷ்ணுபுராணம் மைத்ரேய பராசரஸம்வாதமாக அவதரித்தது. ஸ்ரீ ராமாயணத்தில் "நாரதம் பரிப்ப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம்" என்று உபக்ரமத்திலுள்ளதேயாகிலும் அந்த மஹர்ஷிகளின் ஸம்வாதம் ஊடுருவச் செல்லவில்லை. உபக்ரமமாத்ர விச்ராந்தமத்தனை. இந்த புராணரத்னத்தில் காணும் மைத்ரேய பராசரஸம்வாதமானது அடிதொடங்கி முடியளவும் அவிச்சிந்நமாயிருக்கும். முடிவில் மைத்ரேயர் சொல்லுவதையும் அதற்குப் பராசரர் சொல்லுவதையும் நோக்குமளவில், தத்வஜிஜ்ஞாஸுக்களுக்கு இந்த புராண ரத்னமொன்றே பர்யாப்தமென்பது விளங்கும். ஸ்ரீ ராமாயணத்தில் காண்டமென்றும் ஸர்க்கமென்றும் பாகுபாடுகளிருப்பதுபோல இந்த புராணரத்னத்தில் அம்சமென்றும் அத்யாயமென்றும் பாகுபாடுகளுள்ளது. ஆறு அம்சங்கள் கொண்டது இது. முதல் அம்சத்தில் இருபத்திரண்டு அத்யாயங்களும், இரண்டாவது அம்சத்தில் பதினாறு அத்யாயங்களும், மூன்றாவது அம்சத்தில் பதினெட்டு அத்யாயங்களும், நான்காவது அம்சத்தில் இருபத்துநான்கு அத்யாயங்களும், ஐந்தாவது அம்சத்தில் முப்பத்தெட்டு அத்யாயங்களும், ஆறாவது

அம்சத்தில் எட்டு அத்யாயங்களுமுள்ளன. ஆக நூற்றிருபத்தாறு அத்யாயங்கள்கொண்ட இந்த புராணரத்னத்தில் கடைசியத்யாயத்தில் மைத்ரேயர் பராசரரை நோக்கி *பகவந்! கதிதம் ஸர்வம் யத் ப்ருஷ்டோஸி மயா முநே!,......நாங்யத் ப்ரஷ்டவ்யமஸ்தி மே. விச்சிந்நாஸ் ஸர்வஸந்தேஹா:.* என்று சொன்னதையும், அதற்குமேல் பராசரர் மிக விரிவாகச் சொல்லித் தலைக்கட்டினதையும் நோக்குமவர்களுக்கு இப்புராணத்தின் ஸர்வார்த்த பௌஷ்கல்யம் ஸுவிசதமாகும்.

## 3. ஸ்ரீ விஷ்ணுபுராணத்தின் மத்யஸ்ததையாகிற பரமப்ராமாண்யம்.

இப்புராணத்தின் உபக்ரமத்தை நோக்குமிடத்து இதுவே பரமப்ராமாணிகமான புராணமென்பது புலனாகும். எங்ஙனேயென்னில்; ஆசார்யஹ்ருதயம்—நான்காவது ப்ரகரணத்தில் திருவாய்மொழி நான்காம்பத்தின் ஸாரஸங்க்ரஹமான சூர்ணையில் "இலிங்கத்து விளம்பும் பாஹ்யகுத்ருஷ்டிமத......" என்றவிடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியை யெடுத்துக்காட்டுவது போதுமிங்கு:

"*யந்மயஞ்ச ஜகத்ஸர்வம்* என்று பொதுவிலே ப்ரச்னம்பண்ண, *விஷ்ணோஸ் ஸகாசாதுத்பூதம்* என்று கோல்விழுக்காட்டாலே உத்தரமாகையன்றிக்கே 'எருமையை யானையாகக் கவிபாடித் தரவேணு' மென்பாரைப் போலே லிங்கமென் றொரு வ்யக்தியை நிர்தேசித்து இதுக்கு உத்கர்ஷம் சொல்லித்தரவேணுமென்று, கேட்கிறவனும் தமோபிபூதனாய்க் கேட்க, சொல்லுகிறவனும் தமோபிபூதனாய்ச் சொல்ல இப்படி ப்ரவ்ருத்தமான லைங்கபுராணாதிகளான குத்ருஷ்டிஸ்ம்ருதிகளும்..."

என்பன மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகள். ஸ்ரீ விஷ்ணுபுராணத்தின் உபக்ரமமிருக்குமழகை உபபாதித்தபடியிது. உலகத்தில் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தைவிட ஸ்ரீ ராமாயணத்திற்கு ப்ரசாரம் அதிகமாதலால் அந்த இதிஹாஸச்ரேஷ்டத்தின் உபக்ரம மிருக்கும்படியை முன்னம் நினைப்பூட்டுவோம். *தபஸ்ஸ்வாத்யாயநிரதம் தபஸ்வீ வாக்விதாம் வரம், நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம்.* என்பது ஸ்ரீராமாயணத்தின் முதல் சுலோகம். வான்மீகிமுனிவர் தமது ஆச்ரமத்திற்குவந்த நாரத மஹர்ஷியை நோக்கிக் கேட்டார் என்று இந்த ச்லோகத்திற் சொல்லிற்று. என்ன கேட்டாரென்பதை மேலே *கோநு அஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச் ச வீர்யவாந்* என்று தொடங்கி மூன்று சுலோகங்களாலே சொல்லிற்று. 'ஸ்ரீராமனுடைய பெருமையைச் சொல்லும்' என்று அவர் கேட்கவில்லை; பொதுவாகச் சிறந்த சில திருக்குணங்களைச் சொல்லி இவற்றையுடையவனைச் சொல்லுமென்று இவ்வளவே கேட்டார். அவர் *இக்ஷ்வாகு வம்சப்ரபவோ ராமோ நாம ஜனைச் ச்ருத:* என்று தொடங்கித் தாமாக ஸ்ரீராமபிரானுடைய பெருமைகளைப் பேசினார். அதேபோல, இந்த ஸ்ரீ விஷ்ணுபுராணத்தின் தொடக்கத்திலும் மைத்ரேயருடைய வினாவும் பராசரருடைய விடையும் அமைந்துள்ளது. ஒரு வ்யக்தியைக் குறிப்பிட்டுக் கேள்வி பிறக்கவில்லை. விடை கூறும்போதுதான் *விஷ்ணோஸ் ஸகாசாத் உத்பூதம் ஜகத் தத்ரைவ ச ஸ்திதம்* என்று வ்யக்திவிசேஷ நிர்தேசமுள்ளது. இப்படி அமைவதனால்தான் புராணத்திற்கு ப்ராமாண்யாதிசயம்.

4. வாஸுதேவநாம நிர்வசன விசேஷம்.

ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாமங்களில் வாஸுதேவ: என்பதுமொன்று. இத்திருநாமத்திற்குப் பெரும்பாலும் பலர் நினைத்திருக்கும் பொருள் 'வஸுதேவர்க்கு மகனுய்த் தோன்றினவன்' என்று. "வஸுதேவஸ்ய அபத்யம் புமாந் வாஸுதேவ:" என்று தத்திக வ்ருத்தியினுல் நிஷ்பந்நமாகி இச்சொல் வஸுதேவ புத்திரனென்னும் பொருளைச் சொல்லுகிறதென்பதில் விப்ரதிபத்தியில்லை. தாசரதி: என்கிற சொல் (தத்திகவ்ருத்தியினுல்) தசரதாத்மஜனைச் சொல்லுவதுபோல இதுவும் வஸுதேவாத்மஜனைச் சொல்லுகின்றதென்றுல் தவறில்லை. ஆனல் இந்த புராணரத்னத்தில் (1-2-12.) *ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரேதி வை யத:, ததஸ் ஸ வாஸுதேவேதி வித்வத்பி: பரிபட்ட்யதே.* என்று நிர்வசனம் காட்டப்பட்டுள்ளது. வஸதீதி வாஸு:; வாஸுச் சாஸௌ தேவச் ச—வாஸுதேவ:. என்று விக்ரஹம் காண்க. தான் ஸர்வத்ர வஸிப்பவனுய், தன்னிடத்தில் ஸர்வமும் வஸிக்கப்பெற்றதாயிருக்குமவன் வாஸுதேவன். பிள்ளைலோகாசார்யர் முமுக்ஷுப்படியில் "பகவந்மந்த்ரங்கள்தான் அனேகங்கள்; அவை தான் வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டுவர்க்கம்; அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள்" என்றருளிச் செய்திருப்பது ப்ரஸித்தம். அஷ்டாக்ஷரி, ஷடக்ஷரி, த்வாதசாக்ஷரி என்ற மூன்றும் வ்யாபகமந்த்ரங்களாம். முறையே நாராயண—விஷ்ணு—வாஸுதேவத் திருநாமங்களை உள்ளீடாகக் கொண்டவை இந்த மந்த்ரங்கள். வாஸுதேவமந்த்ரத்தை வ்யாபகமந்த்ரமாகக் கொள்ளவேண்டும்போது வஸுதேவபுத்திரனென்கிற பொருள்கொள்ளப் பொருத்தமில்லை. விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் வாஸுதேவநாமம் மூன்று பர்யாயம் ஓதப்பட்டுள்ளது. பட்டர் தமது பாஷ்யத்தில் [பகவத்குணதர்ப்பணே] மேலே விவரித்த பொருளை முந்துறமுன்னம் ஸாதித்து, மற்ற விடங்களில் வஸுதேவபுத்ரனென்னும் பொருளையுமருளினர்.

5. மஹாவராஹாவதார விசேஷாநுபவம்.

எம்பெருமான் மஹாவராஹாவதாரம் செய்தருளின பெருமை (1—4—26ல்) வெகு அற்புதமாக வருணிக்கப்படுகிறது. *ததஸ் ஸமுத்க்ஷிப்ய தராம் ஸ்வதம்ஷ்ட்ரயா மஹாவராஹஸ் ஸ்புடபத்மலோசந:, ரஸாதலாத் உத்பலபத்ரஸந்நிப: ஸமுத்திதோ நீல இவாசலோ மஹாந்* என்னுமிந்த ச்லோகத்தைத் திருவுள்ளம் பற்றியே நம்மாழ்வார் திருவாய்மொழியின் முடிவில் "நீலவரை இரண்டுபிறை கவ்வி நிமிர்ந்ததொப்பக் கோலவராக மொன்றுய் நிலங்கோட்டிடைக்கொண்ட வெந்தாய்!" என்கிற பாசுரமருளிச் செய்தார். இவ்வாழ்வார் தாய்பாசுரமாகப் பேசின *பாலனுயேழுலகுண்டு (4-2)* பதிகத்தில் *மாதர்மா மண்மடந்தை பொருட்டு ஏனமாய், ஆதியங்காலத்து அகலிடங் கீண்டவர், பாதங்கள் மேலணி பைம்பொன் துழாயென்றே ஓதும்மாலெய்தினள்* என்கிற பாசுரத்தினுல் பூமிப்பிராட்டியை யுத்தரிக்க மஹாவராஹ மூர்த்தியாய்த் திருவவதரித்த காலத்தில் திருவடிகளில்சாத்தின திருத்துழாய் வேணுமென்கிற அபேக்ஷையைக் காட்டியுள்ளார். அந்த ஸமயத்தில் மஹார்ணவத்தில் எம்பெருமானுக்குப் பரிசர்யைபண்ண ப்ரஸக்தி ஏது? அப்போது யாருளர்? என்று சிலர் சங்கிக்கக்கூடுமென்று நம் ஆசாரியர்கள் *லோமாந்தரஸ்தா முநயஸ் ஸ்துவந்தி* என்கிற ச்லோகத்தை யெடுத்துக்காட்டியருளினர்.

அந்த ச்லோகம் இந்த ப்ரகரணத்திலேயுள்ளது. (1-4-29.) *உத்திஷ்டதஸ் தஸ்ய ஜலார்த்ர குக்ஷே: மஹாவராஹஸ்ய மஹீம் விக்ருஹ்ய, விதூந்வதோ வேதமயம் சரீரம் லோமாந்தரஸ்தா முநயஸ் ஸ்துவந்தி.* என்பது புராணரத்னவசனம். வராஹப்பெருமாள் தம்முடைய லோமங்களை உதறும்போது ரோமகூபங்களில் பல மஹர்ஷிகள் ஒடுங்கி யிருந்ததாகச் சொல்லப்பட்டது.

6. (1-9-126.) தேவேந்திரன் ஸ்ரீ மஹாலக்ஷ்மியை ஸ்தோத்திரம் பண்ணுமிடத்து *த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா, த்வயைதத் விஷ்ணுநா சாம்ப! ஜகத்வ்யாப்தம் சராசரம்* என்கிறான். (1-8-17ல்) *நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ, யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம!* என்றுள்ளது. இவற்றைக்கொண்டு எம்பெருமானுக்குப் போலவே பிராட்டிக்கும் ஸ்வரூபவ்யாப்தி யுண்டு; (அதாவது விபுத்வமுண்டு) என்று சிலர் கூறுவர். இங்கு உண்மையை விளக்குவோம். மைத்ரேயர்க்கு உபதேசம் செய்துவருகின்ற பராசரர் *தேவௌ தாத்ரு விதாதாரௌ ப்ருகோ: க்க்யாதிரஸூயத, ச்ரியஞ்ச தேவதேவஸ்ய பத்நீ நாராயணஸ்ய யா* என்று, ப்ருகுபத்னியான க்க்யாதியென்பவள் தாதாவிதாதா என்னு மிரண்டு தேவர்களையும் நாராயண பத்னியான லக்ஷ்மியையும் பெற்றதாகக் கூறினர். அது கேட்ட மைத்ரேயர் *க்ஷீரோதாத் ஸ்ரீஸ் ஸமுத்பந்நா ச்ரூயதே அம்ருதமந்தநே, ப்ருகோ: க்க்யாத்யாம் ஸமுத்பந்நேத்யேததாஹ கதம் பவாந்?* என்று கேள்வி கேட்டார். நித்யையான லக்ஷ்மிக்கு உத்பத்தி சொல்லுவது எங்ஙனே கூடுமென்பது கேள்வியின்ஸாரம். இதற்கு விடையிறுக்கிறார் பராசரர்—*நித்யை வைஷா ஜகந்மாதா……… ததைவேயம் த்விஜோத்தம!* என்றார். விஷ்ணு நித்யனாயிருக்கச் செய்தேயும் அவனுக்கு ஐச்சிகமான உற்பத்தி கூடுகிறாப்போலே பிராட்டிக்குங்கூடுமென்று ஸமாதான ஸாரம். நித்யனாய் நிகில ஜகஜ்ஜநகனாய் நித்யஸித்த லக்ஷ்மீ ஸம்பந்தசாலியாயிருக்கின்ற எம்பெருமான் ஸர்வஜகத்ரக்ஷணார்த்தமாக ஸர்வதேசங்களிலும் ஸர்வஜாதிகளிலும் அவ்வோ விக்ரஹ விசேஷ விசிஷ்டனாய்க்கொண்டு ஸந்நிஹிதனாகிறாப்போல பிராட்டியும் நித்யையாய் நிகிலஜகஜ்ஜநநியாய் நித்யஸித்த பகவத் ஸம்பந்தசாலிநியாயிருக்கச்செய்தேயும் *நித்யாநபாயிநீம்* என்று சொன்ன நிரபாயத்வத்தை ரக்ஷித்துக்கொள்வதற்காக அப்பெருமானுக்கு ஏற்ற விக்ரஹ விசேஷங்களோடே ஸர்வத்ர ஸந்நிஹிதையாகின்றாள் என்றதாயிற்று. நிரபாயத்வமென்பது விச்லேஷ அஸஹத்வமாத்திரமேயன்று. நியததத்ஸாஹசர்யமும் அதுவாகையாலே பிராட்டியின் இந்த ஸந்நிதியானது நிரபாயத்வரக்ஷணார்த்தமேயா கின்றது. இதற்குமேல் *அர்த்தோ விஷ்ணுரியம் வாணீ* என்று தொடங்கி *ரதீ ராகச் ச தர்மச் ச லக்ஷ்மீர் கோவிந்த ஏவ ச* என்னுமளவான பதினாறுச்லோகங்களாலே திவ்யதம்பதிகளின் விக்ரஹ வ்யாப்திப்ரகாரத்தை நன்கு உபபாதித்திருக்கையாலே விக்ரஹவ்யாப்தியே ஸர்வகத சப்தார்த்தமாகத் தகுதியுடையது. ஸ்வரூபவ்யாப்தி விவக்ஷிதமாகில் *தேவதிர்யங் மநுஷ்யேஷு புந்நாமா பகவாந் ஹரி:, ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய நாநயோர் வித்யதே பரம்.* என்றது பொருந்தாதே. அடுத்த ஒன்பதா மத்யாயத்திலும் *ஏவம்யதாஜகத்ஸ்வாமீ தேவதேவோ ஜநார்தந:, அவதாரம் கரோத்யேஷா ததா ஸ்ரீஸ் தத்ஸஹாயிநீ; புநச் ச பத்மா ஸம்பூதா ஹ்யாதித்யோபூத் யதா ஹரி:· யதா ச பார்க்கவோ ராமஸ் ததாபூத் தரணீத்வியம். ராகவத்வேபவத்ஸீதா ருக்மிணீ

க்ருஷ்ணஜந்மநி, அந்யேஷு சாவதாரேஷு விஷ்ணோரேஷா அநபாயிநீ, தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர் தேஹாநுரூபாம்வை கரோத்யே ஷாத்மநஸ் தநும்.* என்கிற சுலோகங்களாலும் ப்ரச்நோத்தரவாக்யத்தின் முதலிலுள்ள ஸர்வகதத்வோக்தியானது நன்கு வியாக்கியானம் செய்யப்பட்டதாயிற்று. *த்வயா ச விஷ்ணுநா சாம்ப ஜகத் வ்யாப்தம் சராசரம்* என்ற வசனமும் இப்புடையிலேதானே நன்கு பொருந்துகின்றதாயிற்று. அந்த ப்ரகரணத்திலேயேயன்றோ *ஸௌம்யா ஸௌம்யைர் ஜகத் ரூபைஸ் த்வயைதத் தேவி! பூரிதம்* என்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லியுள்ளது. இவ்வர்த்தங்களையெல்லாம் பட்டர் *அநுஜநுரநுரூபரூப சேஷ்டா* என்கிறச்லோகத்தினால் ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலும். *யதி மநுஜதிரச்சாம்* என்கிறச் லோகத்தினால் ஸ்ரீகுணரத்நகோசத்திலும் திடமாக்கிவைத்தருளினர். ஆக, ஜீவகோடி ப்ரவிஷ்டையான பிராட்டி அணுஸ்வரூபையேயல்லது விபுஸ்வரூபையல்லளென்றும், வ்யாப்தி சொன்னவிடம் விக்ரஹவ்யாப்தியேயன்றி ஸ்வரூபவ்யாப்தி பரமன்றென்றும் நிர்ணீதமாயிற்று.

7. இந்த புராணத்தில் முதலம்சத்தில் த்ருவசரித்ரமும் ப்ரஹ்லாத சரித்ரமும் அற்புதமாகக் காணத்தக்கவை. த்ருவசரித்திரம் ஸாமாந்யமானது. அந்த பாலபக்தனுக்கு இளமையிலேயே ரோஷமுண்டானதும், கோரமாதவம் செய்யப் புறப்பட்டதும், ஸப்தர்ஷி ஸமாகமமும், பகவத்ஸாக்ஷாத்காரமும், பகவான் அவனை சங்கத்தினால் ஸ்பர்சித்து ஸர்வஜ்ஞனுக்கியதும் நிற்க. அதற்கடுத்தபடியாக ப்ரஹ்லாதாழ்வானுடைய விருத்தாந்தம் பரமபோக்யமாக அநுபவிக்கத்தக்கது. இவனைப்பற்றி (1—15—156) *தர்மாத்மா ஸத்யசௌசாதிகுணாநாம் ஆகர: பர:* என்று பராசரமுனிவர் கூறினது பெரிதன்று. *உபமாநமசேஷாணும் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்* என்றதுதான் ஈடுமெடுப்புமில்லாத வார்த்தை. ஸாதுக்களுக்கு உபமானம் சொல்லும்போது ப்ரஹ்லாதாழ்வானையே சொல்லுவர்களாம். ஒரு புராண பண்டிதர் ப்ரஹ்லாதனைப்பற்றி நிந்தனையாகவெழுதினவொரு சிறு சுவடியில் "உபநிஷத்தில் *பித்ருதேவோ பவ* ஆசார்யதேவோ பவ* என்றதற்கு நேர்மாறாக பித்ருத்ரோஹத்திலும் ஆசார்யத்ரோஹத்திலும் தலைநின்ற ப்ரஹ்லாதன் எப்படி பக்தனுவானே தெரியவில்லை" என்றெழுதியுள்ளார். *குரோரபி அவலிப்தஸ்ய கார்யாகார்யமஜாநத:, உத்பதம் ப்ரதிபந்நஸ்ய ஸத்யஸ் த்யாகோ விதியதே* இத்யாதி சாஸ்த்ரக் கட்டளையையுணராமல் பேசுவார் பேச்சுக்குச் செவிகொடுப்பாருளரோ? ப்ரஹ்லாதாழ்வானுடைய பெருமையைப் பலர் பரக்கப்பேசினும் "அவன் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு விஜயத்வஜமானவன்" என்கிற பெருமையொன்றே தலைசிறந்ததாகும். பகவான் ஸகல சராசரங்களையும் சரீரமாகக்கொண்டு தான் சரீரியாய் [அந்தர்யாமியாய்] நிற்கிறானென்பதுதானே விசிஷ்டாத்வைத ஸித்தாந்தஸாரம். இதனை நன்கு கண்டறிந்து பிறர்க்கும் நன்றாகக் காட்டினவன் ப்ரஹ்லாதாழ்வானொருவனே யாவன். அதை நன்கு விவரிப்போம்.

8. *அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:* என்ற ச்ருதியை மதாந்தரஸ்தர்களும் ஓதுகின்றார்கள், உபந்யஸிக்கின்றார்கள் எனினும் இந்த ச்ருதி அவர்களது கொள்கைக்குச் சிறிதும் கைகொடுப்பதில்லை. ஸுபாலோபநிஷதாதி ப்ரஸித்த

மாய் ஸர்வாந்தர்யாமித்வ பர்யவஸாயியான சரீராத்மபாவத்தை அத்வைதிகளும் இசைந்தார் களாகில் அவர்களும் விசிஷ்டாத்வைதிகளாக விளங்கக் குறையில்லையே. நாம் ப்ரதான ப்ரதிதந்த்ரார்த்தமென்று கொள்ளுமதனைத்தானே ப்ரஹ்லாதாழ்வான் நிதியாகக்கொண்டு வெற்றிபெற்றது. *ஸர்வபூதாத்மகே தாத ஜகந்நாதே ஜகந்மயே, பரமாத்மநி கோவிந்தே* என்று இச்சிறுவன் தந்தைக்கு உபதேசம் பண்ணினதும் இதுதானே. *எங்குமுளன் கண்ணனென்ற மகனைக்காய்ந்த இரணியன் *எங்குமுளனென்ற தத்துவத்தையன்றோ ப்ரத்யக்ஷீகரித்தான். *ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந்மதுஸூதந:, ஸாத்விகஸ் ஸது விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:* என்கிறபடியே கருவிலே திருவுடையானிவன். தாயான கயாதுவின் கருவிலே வஸிக்கும்போதே நாரத மஹர்ஷியால் திருவஷ்டாக்ஷரோப தேசம் பெற்றவன். ஆகவேதான் பரிமளத்தோடு கூடவே அங்குரிக்கும் திருத்துழாய் போலே இவனும் ஸஹஜஜ்ஞாநபக்திகளுடன் தோன்றினன். இவன் தன்னுடைய பக்திச் செல்வத்தைப் பலபடிகளாலே வெளியிட்டுள்ளான். (பதினேழா மத்யாயத்தில்) *ச்ரூய தாம் பரமார்த்தோ மே தைதேயா திதிஜந்மஜா:!* என்று தொடங்கி ஒரு முப்பத்தைந்து சுலோகங்களாலே ஸமவயஸ்கர்களான அஸுர குமாரர்களுக்கு உபதேசிக்கும் அர்த்தங்கள் உண்மையில் அவனுடைய பிரதிஜ்ஞையின்படி பரமார்த்தமே. பல பல வகையான ஆபத்துக்களை விளைத்தும் ஒன்றுக்கும் சளைக்காத விவனை தந்தையான இரணியன் அருகே யழைத்து 'பிள்ளாய்! உன்னுடைய பிரபாவம் அபரிமிதமாகக் காண்கிறதே; இதற்கு என்ன காரணம்? இயற்கையான பெருமையா இது? ஏதேனும் மந்த்ரஸித்தி பெற்றிருக் கிறாயா? சொல்லு' என்று வினவ; அதற்கு விடை கூறும் சிறுவன் "ந மந்த்ராதிக்ருதஸ் தாத! நைவ நைஸர்கிகோ மம, ப்ரபாவ ஏஷ ஸாமாந்யோ யஸ்ய யஸ்யாச்யுதோ ஹ்ருதி" என்று தொடங்கி ஆச்சரியமாகச் சொல்லுகிறான். அவிவேகிகளில் தலைவனான அத் தந்தை சிறுக்கன் பக்கலில் குணங்கண்டு ஆசார்ய ப்ரதிபத்தி பண்ணவேண்டி யிருக்க, அதற்கு நேர்மாறாகச் சீற்றமே மேலிட்டு 'இப்பயலை கிரிப்ருஷ்டத்தில் தள்ளுங்கள்; கீழே உருண்டு விழுந்து கல்லிலும் முள்ளிலும் சிதைந்து தொலையட்டும்' என்று கிங்கரர் களுக்குக் கட்டளை யிட்டான். அவர்களும் அப்படியே செய்ய, அச்சிறுவன் கீழே புரண்டு விழும்போது எப்படி விழுந்தானென்பதைக் கூறுகின்ற பராசர முனிவர் *பபாத ஸோபி அத: க்ஷிப்த; ஹ்ருதயேநோத்வஹந் ஹரிம்* என்றார், 'என்னுடைய ஹ்ருதயத் திலுறையும் பகவானுக்கு ஒரு ஆபத்து மில்லாமலிருக்கவேணுமே' என்று மார்பிலே கை வைத்துக் கொண்டே விழுந்தானென்கிறார். இத்தகைய பக்தி எந்த மஹர்ஷிக்கும் ஆரோபிதமாகவுங்கூட விளையுமதன்றே.

9. வேதாந்தங்களில் ஸாமாநாதிகரண்யநிர்தேசம் பலவிடங்களில் காண்பதுண்டு. *ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்* ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது சந்த்ரமா:* என்றாப்போலே காணப்படும் வசனவ்யக்திகள் ஸாமாநாதி கரண்ய நிர்தேசமெனப்படும். ஒரே விபக்தியால் நிர்தேசிப்பது ஸமாநாதிகரண நிர்தேச மென்றும், வெவ்வேறு விபக்திகளையிட்டு நிர்தேசிப்பது வ்யதிகரணநிர்தேசமென்றும் கொள்க. *ஸ ப்ரஹ்மா ஸ சிவ:* என்றவிடத்திலும் *ததேவாக்நிஸ் தத் வாயு:* என்ற விடத்திலும் ப்ரதமாவிபக்தியொன்று தவிர வேறு விபக்தி புகாமையினால் இது ஸமாநாதி கரண நிர்தேசமெனப்பட்டது. *யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை

வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை* இத்யாதிவாக்யங்களில், ப்ரதமை, த்விதியை, சதுர்த்தி என்னும் மூன்று விபக்திகள் இருப்பதனால் இங்கு ஸமாநாதிகரண நிர்தேசமென்ன முடியாது; வ்யதிகரணநிர்தேசமெனப்படும். ஸமாநாதிகரண நிர்தேச ஸ்தலங்களில்தான் கலக்கம் விளையும். எதனாலென்னில், அத்வைத வாஸனை தோன்றுவதனால். *தத் த்வமஸி* *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* *ஐததாத்ம்யமிதம் ஸர்வம்* இத்யாதி ஸ்தலங்களில் ஸமாநாதிகரண நிர்தேசமிருப்பது கொண்டன்றோ அங்கு விவாதம் விளைந்திட்டது. ஆழ்வார்களின் திவ்யஸூக்திகளிலுங்கூட இத்தகைய ஸமாநாதிகரண நிர்தேசத்தை *நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்* இத்யாதி ஸ்தலங்களிற் காண்கிறோம். ஆழ்வார் திருவாய்மொழி தொடக்கத்திலேயே *உடன்மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்* என்கிற சந்தையினால் சரீராத்மபாவத்தைக் காட்டியருளினபடியால் அருளிச் செயல்களை எளிதாக நிர்வஹிக்கிறோம். அவ்வண்ணமாகவே வடமொழி வேதாந்த வாக்கியங்களையும் அந்தர்யாமி ப்ராஹ்மணாதிகளைக்கொண்டு நிர்வஹிக்கிறோம். இவ்விஷயத்தைப் பராசரமஹர்ஷியின் வசனத்திலுங்காணலாம். எங்ஙனேயென்னில்;

(2—12—38.) *ஜ்யோதீம்ஷி விஷ்ணுர் புவநாநி விஷ்ணுர் வநாநி விஷ்ணுர் கிரயோ திசச்ச—நத்யஸ் ஸமுத்ராச்ச ஸ ஏவ ஸர்வம் யதஸ்தி யந்நாஸ்தி ச விப்ரவர்ய!* என்கிற சுலோகமானது ஸகலமும் அவனேயென்று கூறுகையாலே அத்வைத ப்ரமத்தை விளைக்கும். அதற்கு இடமில்லாதபடி, சரீராத்மபாவத்தாலே இதை நிர்வஹிக்கவேணுமென்பதை மஹர்ஷி முந்தினச்லோகத்தில் காட்டிவைத்தார். (அதாவது) *யதம்பு வைஷ்ணவ: காய: ததோ விப்ர! வஸுந்தரா, பத்மாகாரா ஸமுத்பூதா பர்வதாப்த்யாதி ஸம்யுதா.* என்பது முந்தினச்லோகம். இங்கு விஷ்ணு சித்தியமென்கிற எங்களாழ்வான் வியாக்கியானம் நன்கு விளக்கம் காட்டியுள்ளது. அவ்விடத்து ஸ்ரீஸூக்திகள் இவை—

> "அம்புந: விஷ்ணோ: காயத்வேந தத்பரிணாமபூதம் ப்ரஹ்மாண்டமபி தஸ்ய காய:; தஸ்ய ச விஷ்ணுராத்மேதி ஸகலச்ருதிகத—தாதாத்ம்யோபதேச—உபப்ரும்ஹணரூபஸ்ய *ஜ்யோதீம்ஷீத்யாதிநா வக்ஷ்யமாணஸ்ய ஸாமாநாதிகரண்யஸ்ய சரீராத்மபாவ ஏவ நிபந்தநம் இத்யாஹ......" என்று.

ஆக, ஸமாநாதிகரண நிர்தேசம் இவ்வண்ணமாக எங்குக் கண்டாலும் நம்முடைய ஸித்தாந்தத்திற்கு ப்ரதாநப்ரதிதந்த்ரார்த்தமான சரீராத்மபாவத்தை யுணர்ந்தவர்களுக்கு நிர்வாஹம் எளிதாம் என்றதாயிற்று.

10. மேலேயுதாஹரித்த *ஜ்யோதீம்ஷி விஷ்ணுரித்யாதி ச்லோகத்தின் முடிவில் *யதஸ்தி யந்நாஸ்தி ச* என்றுள்ளதில் ஒரு சங்கை யுதிக்கும். யதஸ்தி என்பதனாலே உள்ள பதார்த்தங்களெல்லாம் பரமாத்மாவுக்கு சரீரபூதம் என்று சொன்னது பொருத்தம்; உடனே 'யந்நாஸ்தி ச' என்று இல்லாத வஸ்துக்களும் அவனுக்கு சரீரபூதமென்கிறதே, இது எப்படி பொருந்தும்? என்று சங்கிக்க நேரும். அநுபபத்தியொன்றுமில்லை, கேண்மின். அஸ்தி சப்தத்தாலே சேதநப்பொருளையும், நாஸ்தி சப்தத்தாலே அசேதனப்பொருளையும் சொல்லுகிறது. நம்முடைய தர்சனத்தில் இல்லாதவஸ்து எதுவுமே கிடையாது. 'துணியில்லை' என்றால் துணியான வுருவத்தோடு இல்லையானாலும், தந்துசகலமான வுருவத்தோடு இருந்து தீரும். இப்படி ஒவ்வொரு பதார்த்தத்திலுங் காணலாம். பகவத்

கீதையில் (2-16) *நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத:, உபயோரபி த்ருஷ்டோந்த:* என்கிற ச்லோகத்தில் "உபயோரபி அந்த: த்ருஷ்ட:" என்றதை நிர்வ ஹிப்பது அருமைப்படும். அந்த: என்பதற்கு நாசமென்கிற பொருள் ப்ரஸித்தமாயிருப் பதனால் தேஹமும் ஆத்மாவுமான இரண்டுக்கும் நாசம் காணப்பட்டது என்றதாகப் பொருள் கொண்டு தடுமாறுவர்கள், இங்கு அப்படி பொருளன்று; நம்முடைய பாஷ்ய காரர் செய்தருளின பொருளாவது - அந்த:- நிர்ணயமென்றபடி; அசேதநத்துக்கு அஸத் த்வமும், சேதநனுக்கு [ஆத்மாவுக்கு] ஸத்த்வமும் தேறிற்று என்பதாக. ஆக *யதஸ்தி யந்நாஸ்திச* என்றதில் அனுபபத்தியொன்றுமில்லை. திருவாய்மொழியில் *இல்லது முள்ளதுமல்லதவனுரு* என்றவிடமும் இங்கு நினைக்கத்தக்கது. 'அவனுரு உள்ளதுமல்ல இல்லதுமல்ல' — பகவத் ஸ்வரூபம் சேதநாசேதநவிலக்ஷணமென்றபடி. *யதஸ்தி யந்நாஸ்தி போலவே *இல்லதுமுள்ளதுமென்றது.

11. இதில் மூன்றுவது அம்சத்தில் ஸப்தர்ஷிகளின் விவரணம், வ்யாஸமஹர் ஷியின் பெருமை, அஷ்டாதச புராணங்களின் விவரணம் முக்கியமாகக் காணத்தக்கன. வஸிஷ்டர், காச்யபர், அத்ரி, ஜமதக்நி, கௌதமர், விச்வாமித்ரர், பரத்வாஜர் ஆகிய எழுவர் ஸப்தர்ஷிகளாகக் கூறப்பட்டனர். (3—1—32) நெஞ்சிலே தேக்கிக்கொள்ள முடியாமல் ஏட்டிலே காணத்தக்க விஷயங்கள் இந்த கெட்டத்தில் வரிசையாக வாசிக்கத் தக்கன. இருபத்து நான்கு அத்யாயங்கள் கொண்ட நான்காவது அம்சம் பூர்த்தியாகப் பெரும்பாலும் கத்ய ரூபம். இடையிடையில் சிறுபான்மை சுலோகங்களுமுண்டு. இதில் இரண்டாமத்யாயத்தில் மாந்தாதாவின் துஹித்ருஸந்ததி விசேஷங்களைச் சொல்லப்புகுந்து ஸௌபரி சரித்திரம் அற்புதமாக வருணிக்கப்படுகிறது. அவர் பன்னிரண்டு வருஷகாலம் நீருக்குள்ளே தவம்புரிந்திருந்து ஒரு நாள் மத்ஸ்யங்களின் ஸகுடும்ப விஹாரத்தையுற்று நோக்கித் தானும் குடும்பியாகவேணுமென்று ஆசை கொண்டு, ஐம்பது பெண்களைப் பெற்றிருந்த மாந்தாதாவினிடம் சென்று ஒரு பெண்ணைத் தனக்குக் கொடுக்கும்படி கேட்க, பிறகு தன்னுடைய மாயச்செய்கையினால் ஐம்பது பெண்களும் மேல் விழுந்து தன்னை மணந்து கொள்ளும்படியாகச் செய்துகொண்டு ஐம்பது வடிவெடுத்து ஐம்பது மாடமாளிகைகளில் வஸித்துச் சிற்றின்பம் நுகர்ந்த வரலாறு சொல்லப்படுகிறது. அத்யாயத்தின் முடிவில் *யச் ச ஏதத் ஸௌபரி சரிதம் அநுஸ்மரதி படதி பாடயதி ச்ருணோதி ச்ராவயதி......*என்று தொடங்கி ப்ரபுலபலச்ருதி காணப்பட்டாலும் வைராக் யத்தைப் போக்கவல்ல இந்த வரலாறு ஒரு கால் வாசித்து மறக்கத்தக்கதென்று சில பெரியார்கள் ஸாதிக்கக் கேட்டிருந்தேன். கதை அற்புதமானதென்று கொள்ளக்கடவது.

12. முப்பத்தெட்டு அத்யாயங்கள் கொண்டதான ஐந்தாவது அம்சம் பூர்த்தியாக ஸ்ரீ க்ருஷ்ணவதார சேஷ்டிதங்களை அத்புதமாகப் பேசுகிறது. கண்ணபிரான் திருவாய்ப் பாடியிலிருந்து கொண்டு செய்த அதிமாநுஷ சேஷ்டிதங்களைப் பதினேழாமத்யாயம் முடியப் பேசியுள்ளது. நம் ஆசார்யர்கள் க்ருஷ்ணாவதாராநுபவத்திற்கு உதாஹரிக்கும் ச்லோகங்கள் பெரும்பாலும் இதில் நின்றுமேயாம். ஸ்ரீ விஷ்ணுபுராணத்தைவிட ஸ்ரீபாக வதம் விரிவாகச் சொல்லுமதாயிருக்கச் செய்தேயும் ஆளவந்தார் உகந்தது ஸ்ரீ விஷ்ணு புராணம் என்கிற கௌரவ ப்ரதிபத்தியினால் இதிலேயே அதிகமான ஆதரம் காட்டியுள் ளார்கள். ஸ்ரீ பாகவதத்தை உபேக்ஷித்தார்களென்பதில்லை. அதிலிருந்தும் ப்ரமாணோ

6-7

பாதானம் பண்ணியேயுள்ளார்கள். ப்ரக்ருதம் நாம் ஸ்ரீ விஷ்ணுபுராணத்தையன்றோ அநுபவிக்கிறோம். இதில் (5—6—24.) *ப்ருந்தாவனம் பகவதா க்ருஷ்ணேந அக்லிஷ்ட கர்மணா, சுபேந மநஸா த்யாதம் கவாம் வ்ருத்திம் அபீப்ஸதா.* என்கிற ச்லோகத்தில் சிறிது விமர்சம். ப்ருந்தா என்று துலஸிக்குப் பெயரென்றும், துளஸீவனத்தைக் கண்ணன் பசும்புற்காடாக ஆக்கினனென்றும் சிலர் சொல்லுவர்கள். அது தவறு. ப்ருந்தா என்று நெரிஞ்சிக்குப் பெயர். நெரிஞ்சிக் காடாயிருந்ததைப் பசும்புற்காடாகக் கண்ணபிரான் ஆக்கியருளினனென்கை. இவ்விடத்தில் கண்ணனுக்கு அக்லிஷ்டகர்மணா என்று விசேஷணமிடப்பட்டுள்ளது. சிரமமின்றிக் காரியம் செய்யவல்லவன் என்பது பொருள். ஒவ்வொரு பசுவுக்கும் கன்றுக்கும் தனித்தனியே புல்லும் தண்ணீரும் தேடிக் கொணர்ந்து கொடுப்பதென்பது மிகவும் சிரமமான காரியமாதலால் அத்தகைய சிரமத்திற்கு இடமில்லாதபடி அந்த ஸ்தலம் முழுவதையுமே எளிதாகப் பசும்புற்காடாக ஆக்கிவிட்டானென்றவாறு. எப்படியாக்க முடிந்ததென்னில்; [அக்லிஷ்டகர்மணா] பகவான் செய்யும் ஸகலலோக ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாராதிகளான காரியங்களெல்லாம் கிலேச லேசமுமின்றிக்கே *ஸோகாமயத* என்று உபநிஷத்து ஓதினபடி ஸங்கல்பமாத்ரத்தாலன்றோ செய்து போருவது. அந்த ஸங்கல்பங்கொண்டே இதுவுஞ் செய்தானென்கை.

13. திருவாய்மொழி ஈடுமுப்பத்தாறாயிரப்படியில் (மஹாப்ரவேசத்தில்) முந்துற முன்னம் நம்பிள்ளை கையாண்ட ஸம்ஸ்க்ருத ப்ரமாண வசனம் *ப்ருந்தாவனம் பகவதா* என்கிற இந்த ச்லோகமேயாகும். அவ்விடத்து ஸ்ரீஸூக்தி வருமாறு:— "*ப்ருந்தாவநம் பகவதா க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா, சுபேந மநஸாத்யாதம் கவாம் வ்ருத்திமபீப்ஸதா* என்கிறபடியே ஸ்ரீப்ருந்தாவனத்தை *உத்பந்ந நவசஷ்பாட்யமென்னும்படி கடாக்ஷித்தாப் போலே தத்வங்களை விசதமாக அறியவல்லராம்படி (ஆழ்வாரைக்) கடாக்ஷித்தான்" என்று. இங்கு இந்த ச்லோகத்தை உபாதானம் பண்ணினதற்குத் திருவுள்ளமென்னென்னில்; இவ்விருள்தருமாஞாலத்திலுள்ள ஸம்ஸாரி சேதநர்களெல்லார்க்கும் தத்வஜ்ஞானத்தையுண்டாக்கி உஜ்ஜீவனம் பண்ணுவிக்கவேணுமென்று திருவுள்ளங்கொண்ட எம்பெருமான் இதை அக்லிஷ்டகர்மாவாய்க் கொண்டு செய்யக்கருதி ஆழ்வாரொருவரைக் கடாக்ஷித்து அவர் முகமாக எளிதில் தன் அபேக்ஷிதம் நிறைவேறப்பெற்றானென்பது விவக்ஷிதம். ஆசார்ய ஹ்ருதயத்தில் (96.) "கோவ்ருத்திக்கு நெரிஞ்சியைப் புல்லாக்கினவன் ஜகத்ஹிதார்த்தமாக என்க்கே நல்லவருள்களென்னும்படி ஸர்வஸௌஹார்த்த ப்ரஸாதத்தை ஒருமடை செய்து இவரைத் தன்னுக்க லோகமாகத் தம்மைப் போல வாக்கும்படியானார்" என்ற சூர்ணையில் இக்கருத்து விளக்கப்பட்டது. ஊரும் நாடுமுலகமும் ஆழ்வாரைப்போல் பகவத் விஷயப்ரவணமாம்படிக்குறுப்பாக ஆழ்வாரைக் கடாக்ஷித்தருளினது நெரிஞ்சிக்காட்டைப் பசும்புற்காடாக்கினது போல் அநாயாஸமாகச் செய்த காரியமென்று கூறியவாறு.

14. கண்ணபிரான் *ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாயொளித்து வளர்ந்தது திருவாய்ப்பாடியில். அங்கிருந்து ப்ருந்தாவனம் வருவதற்கு என்ன ப்ரஸக்தி யென்பதை ஸ்ரீ விஷ்ணுபுராணங்கொண்டே அறியவேணும். இதில் ஆறாவது அத்யாயத்தில் பூதநாசகடயமலார்ஜுந விபத்துக்கள் நேர்ந்ததைச் சொல்லிவிட்டு *கோபவ்ருத்தாஸ் ததஸ் ஸர்வே நந்தகோபபுரோகமா:, மந்த்ரயாமாஸு ருத்விக்நா மஹோத்பாதாதிபீரவ:*

என்று தொடங்கி, கோகுலத்தில் வாஸம் மிகவும் ஆபத்துக்கிடமானதென்றும், அங்கிருந்து அருகேயுள்ள ப்ருந்தாவனம் நிரபாயமான ஸ்தலமாகையாலே எல்லாரும் அங்குச் சென்று சேரவேணுமென்று ஆலோசித்ததாகவும் சொல்லி, கோபாலர்களனைவரும் தாமதமின்றி அங்குச் சென்று சேர்ந்ததாகவும் சொல்லியுள்ளது. பிறகுதான் நெரிஞ்சிக்காடானவது பசும்புற்காடாக ஸங்கல்பிக்கப்பட்டதென்று உணர்க. கண்ணபிரானுடைய திவ்ய சேஷ்டிதங்கள் திருவாய்ப்பாடியிலும் ப்ருந்தாவனத்திலுமாக நடைபெற்றவை. நம் ஆசாரியர்கள் "பஞ்சலக்ஷங் குடிப்பெண்கள்" என்று பலகாலும் அருளிச் செய்வதனுல் வ்ரஜபூமி வெகுவிஸ்தாரமானது. இப்போது கோகுலம் என்று வழங்கப்பட்டு வருகிற ஸ்வல்பபாகமேயன்று. நந்தகாம், பர்ஷாணு முதலான வ்ரஜபூமிகள் அபரிமிதமானவை.

15. க்ருஷ்ண லீலைகளில் சகடபஞ்ஜனமென்பதுமொன்று. க்ருஷிமுதலான் காரியங்களுக்கு இடையர்களின் வீட்டில் வண்டியிருப்பது ஸஹஜம். வண்டியில் ஏணை கட்டி அதில் கண்ணனைப் படுக்கவிட்டு உறங்கப்பண்ணி யசோதை தன் வீட்டுக்காரியங்களைப் பார்ப்பள். ஒருநாள் நடந்த செய்தியைப் பராசர முனிவர் ஆருவது அத்யாயத்தின் தொடக்கத்தில் பேசுகின்ருர்— *கதாசித் சகடஸ்யாதச் சயாநோ மதுஸூதந:, சிக்ஷேப சரணுவூர்த்வம் ஸ்தந்யார்த்தீ ப்ரருரோத ஹ* இத்யாதி. இதைக்கொண்டே நம் ஆசாரியர்கள் "முலைவரவு தாழ்த்ததனுல் சீறிநிமிர்த்த திருவடிகளாலே சகடத்தைச் சாடினுயிற்று" என்றருளிச் செய்துள்ளார்கள். இது நிற்க. கம்ஸன் கண்ணபிரானை நலியப் பல அசுரர்களை ஏவியிருந்தானென்பதுண்டு. ஆனால் சகடத்தில் அஸுரன் ஆவேசித்ததாக ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டிருக்கவில்லை. ஆயினும், நம்மாழ்வார் திருவாய்மொழியில் (6—9—4) *தளர்ந்தும் முறிந்தும் சகடவசுரருடல் வேறாப் பிளந்து வீயத்திருக்காலாண்ட பெருமானே* என்றருளிச் செய்ததனுல் சகடாஸுரனென்றே ஒரு ப்ரஸித்தி வந்திருக்கிறது. இப்படியே யமலார்ஜுனத்திலும் அஸுராவேசமிருந்ததாகச் சொல்லப்படவில்லை. ஆயினும் பெரியாழ்வார் (3—1—3) *பொய்ம்மாய மருதான வசுரரை* என்றருளிச் செய்துள்ளார். திருவாய்ப்பாடியில் எழும் பூண்டெல்லாம் அசுரப் பூண்டேயென்பது மங்களாசாஸனபரர்களான ஆழ்வார்களின் அத்யவஸாயம்.

16. பதின்மூன்ருமத்யாயத்தில் கோவர்த்தநோத்தரணம் பண்ணிக் கோநிரை காத்த கதையைச் சொன்ன பின்பு கண்ணன் ராஸக்ரீடையிலே குதூஹலங்கொண்டது, அதற்காக வேணுகானம் பண்ணினது, உடனே பலபல ஆயர் சிறுமியர் வந்து கூடினது, சில பெண்கள் அந்த கோஷ்டியில் வந்து சேரமுடியாமல் தளர்ந்தது, குரவைகோத்த குழகன் ஒரு நொடிப்பொழுதில் மறைந்தது, பிரிவாற்ருத கோபிகள் அவனைத் தேடியலைந்து ப்ருந்தாவனமெங்கும் தட்டித்திரிந்தது, மீண்டும் அப்பெருமான் கண்ணுக்கிலக்காகி அப்ரமேயமாக ரமித்தது—என்னுமிவ் விஷயங்கள் [பதின்மூன்ருமத்யாயமொன்றிலே ஸம்க்ஷேபித்துச் சொல்லி முடிக்கப்பட்டன. அநுபவரஸிகர்களுக்கு இவற்றில் ஒவ்வொன்றும் இரண்டு மூன்று அத்யாயங்களாலே நின்று நின்று அநுபவிக்க வேண்டியவை. இவை எதனுலிப்படி ஸம்க்ஷேபிக்கப்பட்டனவோ அறிகின்றிலேன். ராஸக்ரீடையென்பதை ஆழ்வார்கள் குரவைகோத்தாடல் என்று கூறி அடிக்கடி வாய்வெருவுகின்ருர்கள். கூரத்தாழ்வான் தம்முடைய ஸ்தவங்களிலே நினைந்துநைந்து உள்கரைந்துருகுவது ராஸக்ரீடையைப் பற்றியே. இந்த க்ரீடையின் ஸ்வரூபமே பரம

விலக்ஷணமானது. கோபிகள் எண்ணிறந்தவர்களாய், கண்ணன் ஒருவனுயிருக்கச் செய்தேயும் தானும் அத்தனே வடிவுகள் கொண்டு ஒவ்வொரு கோபியினிடையிலும் ஒவ்வொரு கண்ணனுகவிருந்து அநுபவித்தப்ரகாரமானது விண்ணின்மீதமரர்கள் விரும்பித் தொழவேண்டும்படியாயிருந்தது.

17. பகவத்கீதை பதினேராமத்யாயத்தில் கண்ணன் அர்ஜுநனுக்கு விச்வரூபங் காட்டினது பெரிதன்று: ஆசார்யஹ்ருதயத்தில் "குரவை துவரைகளில் வடிவுகொண்ட சபலனுக்கு" என்பது அற்புதமானவொரு ஸ்ரீஸூக்தி. அங்கு மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி:—"*அங்கநாமங்கநாமந்தரே மாதவோ மாதவம் மாதவஞ்சாந்தரேணுங்கநா* என்கிறபடியே திருக்குரவையில் பெண்களோடே அநேக விக்ரஹபரிக்ரஹம் பண்ணி அநுபவித்தாப்போலவும், *ஏகஸ்மிந்நேவ கோவிந்த: காலே தாஸாம் மஹாமுநே, ஜக்ராஹ விதிவத் பாணீந் ப்ருதக் கேஹேஷு தர்மத:: உவாஸ விப்ர! ஸர்வாஸாம் விச்வரூபதரோ ஹரி:* என்கிறபடியே ஸ்ரீமத் த்வாரகையில் தேவிமாருடனே பதினாறுயிரம் விக்ரஹங்கொண்டு அநுபவித்தாப் போலவும்" என்று. இங்கே "குரவை துவரைகளில் வடிவுகொண்ட சபலன்" என்கிற மூல ஸ்ரீஸூக்திக்கு உபயவிபூதியுமீடாகாதன்றோ. முதல் விச்வரூப பரிக்ரஹம் ராஸக்ரீடையில்; இரண்டாவது விச்வரூபபரிக்ரஹம் நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறு பல்லாயிரமெண்ணிறந்த தேவமாதர்களை மணம்புணர்ந்தகாலத்து. பராசரமுனிவர் முப்பத்தோராமத்யாயத்தில் இதனை விரியக் கூறுகின்றார்; மேலே யெடுத்துக்காட்டின *ஏகஸ்மிந்நேவ கோவிந்த:* இத்யாதிச்லோகம் அவ்விடத்தில்தானுள்ளது. தேவேந்திரனுடைய வேண்டுகோளுக்கிணங்கிக் கண்ணபிரான் ஸத்யபாமையோடுங்கூடப் பெரிய திருவடியின் மேலேறி ப்ராக்ஜோதிஷபுரத்திற்கெழுந்தருளி நரகாசுரனை வதைத்து அங்கு அவன் சிறையிலடைத்துவைத்திருந்த பதினாறுயிரத்தொருநூறு தேவகன்னிகைகளைச் சிறைமீட்டுக்கொணர்ந்து த்வாரகையிலே அத்தனை திருமாளிகைகளை யுண்டாக்கி, அத்தனை வடிவுகளைக்கொண்டு அத்தனை புரோஹிதர்களைக்கொண்டு தனித்தனியே மணம்புணர்ந்த கதை மிக மநோஹரமானது.

18. ஸ்ரீராமாவதாரத்தில் *தச வர்ஷஸஹஸ்ராணி தச வர்ஷசதாநி ச, ராமோ ராஜ்ய முபாஸித்வா* என்கிறபடியே பதினேராயிரமாண்டு இந்நிலத்திலெழுந்தருளியிருந்ததாக வறிகிறோம். க்ருஷ்ணுவதாரம் ஒரு நூறாண்டு என்றுமறிகிறோம். அந்த ஒரு நூறாண்டினுள்ளும் திருவாய்ப்பாடியிலும் ஸ்ரீப்ருந்தாவனத்திலும் எழுந்தருளியிருந்த சில ஆண்டுகளில் செய்த செயல்களே நெஞ்சை நீர்ப்பண்டமாக்குவன. கூரத்தாழ்வான் அதிமாநுஷ ஸ்தவத்தில் இருபது ச்லோகங்களாலே திருவாய்ப்பாடி லீலைகளையநுபவித்து *ஹா ஜந்ம தாஸஷிகதாஸ மயா ந லப்தம் ராஸே த்வயா விரஹிதா: கில கோபகந்யா:, யாஸ் தாவகீநபதபங்க்தி ஜுஷோஜுஷந்த நிக்ஷிப்ய தத்ர நிஜமங்க மநங்கதப்தம்* என்றருளியவொரு சுலோகத்தை வாழ்நாளுள்ளவளவும் அல்லுநன்பகலுமிடைவீடின்றி யநுபவித்தாலும் ஆராது. ராஸக்ரீடையினன்று கண்ணனைப் பிரிந்த கோபிகள் யமுனைக்கரையின் மணல்களிலே விழுந்து புரண்டார்களென்கிறது இதில். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி வானமாமலை சின்ன கலியன் ஸ்வாமி வடநாட்டுத்திருப்பதி யாத்திரையில் ப்ருந்தாவனத்தில் எழுந்தருளியிருந்த காலத்து இந்த ஆழ்வான் ஸ்ரீஸூக்தியைப் பலகாலுமநுஸந்தித்து, சிஷ்ய மண்டலீ பரிவ்ருதராய் யமுனையாற்றங்கரைக்கெழுந்தருளி தம்முடன் வந்தவர்களெல்லாரையும் ஓரிடத்திலே நிறுத்தித் தாம் வெகுதூரமெழுந்தருளித் திருவரையில் காஷாயத்தையும் களைந்திட்டு இரண்டு நாழிகைப்போது அந்த மணல்களிலே புரண்டருளினரென்று கேட்டிருக்கை. ஸ்ரீ க்ருஷ்ணுவதார சேஷ்டிதங்களைப் பராசர மஹர்ஷியநுபவித்தது குளப்படியாய், பெரியாழ்வாரநுபவித்தது பெருங்கடலாயிக்குமென்பர் பெரியோர். ... ... ...

# 10. பகவத் விஷயத்தில் பதினெட்டு

## முன்னுரை.

நாம் அநுபவிக்கும் இதிஹாஸ புராண நூல்களும் மற்றுமுள்ள அத்யாத்ம சாஸ்த்ரங்களுமெல்லாம் எம்பெருமானைப் பற்றியவையே யாதலால் அவற்றையும் பகவத் விஷயமென்னத் தட்டில்லை; ஆனாலும் பகவத் விஷயமென் கிற வ்யபதேசம் திருவாய்மொழி வியாக்கியான மொன்றுக்கே நெடுநாளாக வழங்கி வருகின்றது. திருவாய்மொழிகாலக்ஷேபத்தையே எங்கும் பகவத் விஷய காலக்ஷேபமென்கிறோம். காஞ்சீபுரத்திற்குப் பெருமாள்கோயில் என்று அநாதிகாலமாக வ்யவஹாரமுள்ளது; இதைக் கேட்பவர்கள் சிலர் "மற்றவை பெருமாள் கோயிலன்றோ? பிள்ளையார் கோவிலா?" என்கிறார்கள். அதுபோலவே "மற்றவை பகவத் விஷயமல்லவா?" என்றும் சிலர் கேட்பதுண்டு. ஆரைக்கேட்பது. பூருவாசாரியர்கள் காலந்தொட்டு இப்படியே வ்யபதேசம் நிகழ்ந்துவாரா நின்றது. உண்மையில், திருவாய்மொழியைக் கொண்டு அநுபவிப்பதுதான் பகவத் விஷயாநுபவமாகும். * நமாம்யஹம் த்ராவிடவேத ஸாகரம் * என்றபடி திருவாய்மொழி ஒரு கடல். *ஜீயாத் பராங்குச பயோதி:* என்றபடி, திருவாய்மொழியை யருளிச்செய்த நம்மாழ்வாரும் ஒரு கடல். திருவாய்மொழிக்கு ப்ரதிபாத்யனான எம்பெருமானே *பெரும்புறக்கடல் திருவாய்மொழிக்கு வியாக்கியானமான ஈடு முப்பத்தாறுயிரமோ * அப்ரமேய மஹோர்ததி. இங்ஙனே ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வர்க்கமெல்லாம் கடலாகவே காண்கிறது. இதிலிருந்து பதினெட்டு விஷயம் எடுத்துரைப்பதென்றால் ஒருதிவலைகூட எடுத்துரைத்ததாகாது. ஆயினும், அடியிலிட்ட ப்ரதிஜ்ஞையின்படி ஸாரமாகப் பதினெட்டு விஷயங்களுரைக்கக் காண்மின். பதினெட்டு விஷயங்களில் முதலொன்பது விஷயங்கள் ஒரு பகுதியாகவும், மேலொன்பது விஷயங்கள் வேறொரு பகுதியாகவும் அமைக்கப் படுகிறது. முதற்பகுதியான ஒன்பதில் ஆழ்வாருடைய அந்யாபதேசப் பாசுரங்களின் மருமமும் தத்துவமும் பலருடைய உள்ளத்திலுள்ள சங்கைகள் தீரும்படி நிருபிக்கப்படும். மேற்பகுதியில் நம்பூருவாசாரியர்கள் திருவாய்மொழிக் கடலில் அவகாஹித்து நிர்வஹித்த ப்ரகாரங்கள் பல நூறுனவற்றில் பத்தெட்டு மூதலிக்கப்படும். .... ... முன்னுரை முற்றிற்று.

### வடமொழி வேதத்திற்கொரு நான்முகன்; தென்மொழிவேதத்திற்கொரு நான்முகன்.

1 வடமொழி வேதமானது எப்படி அவதரித்த தென்று பார்க்கில் *அநாதி நிதநா ஹ்யேஷா வாக் உத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா* என்கிறபடியே நான்முகக் கடவுள் மூலமாக அவதரித்ததாகத் தெரிய வருகிறது. *யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை* என்கிற உபநிஷத்தும் எம்பெருமானிடத்தில் முதன்முதலாக நான்முகன் உபதேசம் பெற்றதாகத் தெரிவிக்கின்றது. பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் *ஸ்ஃப்தோத்புத்த விரிஞ்சபூர்வஜநதாம் அத்யாப்ய* என்று நான்முகனையே முந்தின அத்யேதாவாகத் தெரிவித்தருளினர். ஆக, வடமொழி வேதத்திற்கு ப்ரதமப்ரவர்த்தகன் நான்முகனைப் போலே, தென்மொழி வேதமாகிய த்ரமிடோப நிஷத்துக்கும்

நான்முகனே ப்ரதம ப்ரவர்த்தகனுகவுள்ளான். எங்ஙனே யென்னில்; ஒரு பரம பக்தர்—"சதுர்முக ஸமாக்க்யாபி சடகோபமுநெள ஸ்திதா, ஸ்வவாசா மாத்ரு துஹித்ரு ஸகீவாசா ச வர்ணநாத்." என்று சொல்லி வைத்தார். இதன் பொருளாவது, ஆழ்வார் நான்கு முகங்களாலே பேசியுள்ளபடியைப் பார்க்கிருேம். நான்கு முகங்கள் எவை யென்னில்; [ஸ்வவாசா] ஆழ்வார் தாமான தன்மை குலையாமல் குருகூர்ச் சடகோபனுகவே யிருந்து *உயர்வற வுயர்நலம்* *வீடுமின் முற்றவும் *பத்துடையடியவர்* முதலான பதிகங்கள் பேசியிருப்பதனுலும். [மாத்ரு வாசா] * ஆடியாடியகங்கரைந்து * *பாலனுயேழுலகுண்டு* *மண்ணையிருந்து துழாவி* முதலான பதிகங்கள் தாய்வாக்காகப் பேசியிருப்பதனுலும் [துஹித்ரு வாசா] *அஞ்சிறையமடநாராய்* *வாயுந்திரையுகளும்* முதலான பதிகங்கள் மகள் பேச்சாகப் பேசியிருப்பதனுலும். [ஸகீவாசா] *தீர்ப்பாரையாமினி* *துவளில் மாமணிமாடம் *கருமாணிக்கமலை* என்கிற பதிகங்கள் தோழிபேச்சாகப் பேசியிருப்பதனுலும் ஆழ்வார்க்கு நான்கு முகங்கள் தேறினதாகத் தெளிக.

ஆழ்வார்க்குண்டாகும் பெண்பாவனையின் பொருத்தம்.

2. நூறுபதிகங்கள்கொண்ட திருவாய்மொழியாயிரத்தில் எழுபத்து மூன்று பதிகங்கள் தம்முடைய திருவாக்காலே (ஆண்மை குன்ருமல்) பேசினவை; மிகுந்த இருபத்தேழு பதிகங்களில் பதினேழு பதிகங்கள் தலைமகள் பேச்சாலே பேசினவை; ஏழுபதிகங்கள் தாய் பேச்சாலே பேசினவை. மூன்று பதிகங்கள் தோழி பேச்சாலே பேசினவையென்று கண்டு கொள்வது. தலைமகளென்பது யாரை? தாயாரென்பது யாரை? தோழியென்பது யாரை? என்று தெரிந்துகொள்ள வேண்டும். இதை மிக விளக்கமாக ஈண்டு நிரூபிக்கிறேன். நம்மாழ்வார் தம் வாயாலும் வேற்று வாயாலும் பேசுகிருரென்பதை முன்னம் குறிக்கொள்ள வேணும். தம் திருவாக்காலே பேசுவதென்பதில் விளக்கம் வேண்டியதில்லை. அஃது இயற்கையான பேச்சென்பது யாவருமறிந்தது. வேற்று வாயாலே சொல்லுவதாவது பெண்மை யெய்திப் பேசுவதாம். ஆழ்வார் ஆடவர்களில் தலைவராக அவதரித்திருக்கச் செய்தேயும் "பாஞ்சால்யா: பத்மபத்ராக்ஷ்யா: ஸ்நாயந்த்யா: ஜகனம் கனம், யாஸ் ஸ்த்ரியோ த்ருஷ்டவத்யஸ் தா: பும்பாவம் மநஸா யயு:" என்று மஹாபாரதத்தில் சொன்ன கட்டளையிலே (அதாவது. விராட நகரத்தில் பாண்டவர்கள் அஜ்ஞாதவாஸம் பண்ணினபோது நீராடாநின்ற த்ரௌபதியின் ஒப்புயர்வற்ற ஸௌந்தர்ய லாவண்யாதி அதிசயங்களைக்கண்ட பெண்டுகள் 'ஐயோ! நாம் ஆண்களாகப் பிறவாமற் போனேமே' என்று நினைத்து மாநஸிகமாகப் புருஷபாவனையை யெய்தினராம். இதை வேதாந்தவாசிரியரும் *பாஞ்சாலீ காத்ர சோபாஹ்ருத ஹ்ருதய வதூவர்க்க பும்பாவ நீத்யா* என்கிற சுலோகத்தினுல் இட்டுவைத்தார். ஆகவே புமானுன ஆழ்வார்க்குப் பெண்பாவனை ஏற்கும்.

புமான்கள் பெண்மை காட்டுவதன் உட்கருத்து

3. நம் பூருவாசாரியர்கள் மிகப் பொருத்தமாக இவ்விஷயத்தில் ஒரு காரிகை இட்டருளியுள்ளார்கள். அது திருநெடுந்தாண்டக வியாக்கியானத்தில் கையாளப்பட்டுள்ளது. (அதாவது) "ஸ்வாமித்வ ஆத்மத்வ சேஷித்வ பும்ஸ்த்வாத்யா: ஸ்வாமிநோ குணா:, ஸ்வேப்யோ தாஸத்வ தேஹத்வ சேஷத்வ ஸ்த்ரீ

த்வ தாயிந:" என்பதாம். இதன் பொருளாவது–எம்பெருமான் ஸர்வஸ்வாமி யென்றும், ஸர்வபூதாந்தராத்மாவென்றும் ஸர்வசேஷியென்றும் புருஷோத்தம னென்றும் சொல்லப்படுகிறுன். அவன் ஸ்வாமியாயிருப்பதற்குச் சேர நாம் தாஸர்களாகிறேம்; அவன் ஆத்மாவாயிருப்பதற்குச்சேர நாம் சரீரபூதர்களாகி றேம். அவன் சேஷியாயிருப்பதற்குச் சேர நாம் சேஷ பூதர்களாகிறேம். அவன் புருஷோத்தமனுயிருக்கும்தன்மையானது நமக்குப் பெண்மையை விளைக்கின்றது. என்கை. அவனும் ஸ்வாமியாய் நாமும் ஸ்வாமியாயிருக்க முடியுமோ? அவனும் அந்தராத்மாவாய் நாமும் அந்தராத்மாவாயிருக்க முடியுமோ? அவனும் சேஷி யாய் நாமும் சேஷியாயிருக்க முடியுமோ? சேஷித்வமாவது கைங்கரியம் கொள் ளுகை; சேஷத்வமாவது தொண்டு செய்கை. இவ்விரண்டும் ஏகாச்ரயத்தில் இராதன்றே. அப்படியே அவனும் புருஷனுய் நாமும் புருஷராயிருக்க முடியுமோ? எங்ஙனே முடியும்? ஆகவே தாஸத்வ தேஹத்வ சேஷத்வங்கள் போலே ஸ்த்ரீ த்வமும் சேதனர்க்கு இயற்கையானதேயென்று தேறிற்று. புமானைப் புமான்களே யனுபவிப்பதென்பதில் ரஸமில்லையே. ஆண்களாய்ப் பிறந்தவர்களுக்கு சரீர தர்மமாகப் பெண்மை ஸம்பவிப்பதன்ருகிலும் பாவநாவிசேஷ அபரபர்யாயமான ஸ்த்ரீத்வம் ஸம்பவிக்கக் குறையில்லை அத்யந்த பாரதந்த்ரியமன்றே ஸ்த்ரீ தர்மம். அப்படிப்பட்ட பாரதந்த்ரியத்தை ப்ரகாசப் படுத்துவதுதான் பெண்ணுகை.

ஈச்வர சேதநர்களுக்குப் பதிபத்நீபாவம் திருமந்த்ரஸித்த மென்பது.

4. எம்பெருமானுக்கும் நமக்கும் நவவித ஸம்பந்தம் திருவஷ்டாக்ஷர மஹாமந்திரத்தில் தேறுவதாக ஆசாரியர்கள் நிரூபிக்கிறுர்கள். அவற்றுள் பதி பத்நீபாவ ஸம்பந்த மென்பது நான்காவதாகும்; திருமந்த்ரத்தில் இது எந்த சொல்லால் தேறுகின்றதென்னில், பிரணவத்தில் இடைச் சொல்லான உகாரத் தினுல் தேறுகின்றது. உகாரம் அவதாரணுர்த்தமாய் சேதனன் எம்பெருமானெரு வனுக்கே சேஷப்பட்டவனென்றுகாட்டி [அநந்யார்ஹத்வத்தைக்காட்டி] ''கண் டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும், கொண்டானையல்லால் அறியாக் குலமகள் போல்'' என்ற குலசேகராழ்வார் ஸ்ரீஸூக்தியின்படி பதிபத்நீபாவ ஸம்பந்தத்தை (அல்லது, பர்த்ரு பார்யா பாவரூப ஸம்பந்தத்தை )க்காட்டிநிற்கும். ஆகவே ஜீவாத்மாவின் ஸ்த்ரீத்வம் ஸகல சாஸ்த்ர ஸாரமான திருமந்திரத்தில் ஸித்த மென்றதாயிற்று. எம்பெருமானுடைய அந்தரங்க மஹிஷிகளான ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவிகளின் ஸாதர்மியத்தையே ஆழ்வார் அடைகின்றுர். ஆனது பற்றியே திருவாய்மொழியில் (6-5-10 *பின்னைகொல் நிலமாமகள் கொல் திரு மகள்கொல்பிறந்திட்டாள்*என்று தோழி பாசுரமுள்ளது. பெரிய திருமொழியிலும் *காவியங்கண்ணி யெண்ணில் கடிமாமலர்ப்பாவை யொப்பாள்* என்று தாய் பாசுரமுள்ளது. இவற்ருல் ஆழ்வார் எய்தும் பெண்மை ஸாமான்யமான ஸ்த்ரீத்வ மன்று; தேவதேவ திவ்ய மஹிஷீஸாதர்மியம்–என்றதாயிற்று.

பக்திநூல்களுக்குப் பெண்பேச்சு பொருந்தும் வகையும், மகள் தாய்பேச்சுக்களின் ஸ்வாபதேசமும்.

5. தலைமகளென்பதும் நாயகி யென்பதும் பரியாயம். தாயாருடைய த்ருஷ்டியாலே மகளாகிறுள். நாயகனுடைய த்ருஷ்டியாலே நாயகியாகிறுள்.

மகளுக்குத் தாயாரொருத்தி யிருப்பதும், நாளடைவில் தோழிமார் ஏற்படுவதும் ஸஹஜம். ஆகவே ஸ்த்ரீ பாவனையில் ஒருபோது தாய் பேச்சும் ஒருபோது மகள் பேச்சும், ஒருபோது தோழிபேச்சும்நிகழ்கின்றன. பக்தியே ச்ருங்கார வகையில் பரிணமிப்பதனுல் இத்தகைய பேச்சுகள் பக்திநூல்களுக்கு அவத்யமாகாது மண வாளமாமுனிகள் திருவாய்மொழி நூற்றந்தாதியில் (4) 'அஞ்சிறைய மடநாராய்ப் பதிகத்திற்கு ஸாரமருளிச்செய்பவர் *அஞ்சிறைய புட்கள் தமை ஆழியானுக்கு நீர். என்செயலைச் சொல்லுமென விரந்து—விஞ்ச நலங்கியதும் மாறனிங்கே நாயகனைத் தேடி. மலங்கியதும் பத்திவளம்'' என்று அருளிச்செய்தது காண்க. அதில் பத்திவளமென்றது உயிரான பேச்சு. இங்ஙனே தாய்பேச்சாகவும் தலைவி பேச்சாகவும் தோழி பேச்சாகவும் வெளிவருவதற்கு என்ன கருத்தென்பதை இனி விவரிக்கிறேன். பிள்ளை லோகாசாரியர் முமுக்ஷுப்படியில் த்வய ப்ரகரணத்தின் தொடக்கத்தில் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களை யருளிச் செய்யு மிடத்து "பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும் பேற்றுக்கு த்வரிக்கையும்'' என்று இரண்டு அருளிச் செய்கிருர். பேறு தப்பாதென்று துணிந்திருக்கையாவது தம்மிடத்தில் உபாயாநுஷ்டான மொன்றுமில்லாமையையும் தாம் செய்த குற்றங் களின் மிகுதியையுங்கண்டு பேறு கிடைக்குமோ கிடைக்காதோ வென்று தளும்பி யிருக்கையன்றிக்கே பேறு தப்பாமல் ஸித்திக்குமென்று திடமான அத்யவஸாயத் தோடிருக்கை. பேற்றுக்கு த்வரிக்கையாவது இந்த அத்யவஸாயங்கொண்டு பேறு ஸித்தித்தபோது ஸித்திக்கட்டும் என்றிருக்கையன்றிக்கே க்ரமப்ராப்தி பற்ருமல் பதறுகை. ஆக இவ்விரண்டும் ஏகாச்ரயத்தில் இருக்கப் பொருத்தமில்லை; திடமான அத்யவஸாயங் கொண்டிருந்தால் பதறுகைஅப்ராப்தம் பதறுவதானுல் அத்யவஸாயத்திற்கு அர்த்தமில்லையாகும் பதருமலிருப்பதற்கு உறுப்பன்ரோ அத்யவஸாயம். இரண்டும் அவர்ஜநீயமாயிருக்கையாலே தாய் பேச்சாலே அத்யவஸாயத்தை வெளியிடுவதும். மகள் பேச்சாலே பதற்றத்தை [பேற்றுக்கு த்வரிக்கையை] வெளியிடுவதுமாய்ச் செல்லுகிறது. தாய் அத்யவஸாய நிஷ்டை; மகள் த்வரா நிஷ்டை என்றதாயிற்று.

### தோழி தாய் மகள் பேச்சுக்களின் சுவையாராய்ச்சி.

6. திருவாய்மொழியில் (5-5) *எங்ஙனேயோ வன்னைமீர்காளென்கிற பதி கத்தைக் கொண்டு தோழி தாய்மகள் பேச்சுக்களின் சுவைகளை ஆராள்வோம்; இதில் பாசுரந்தோறும் 'அன்னையரும் முனிதிர்' 'அன்னைகாணகொடாள்'' என்கிற சொல்தொடர் வருவதைக் காண்கிரேம் [முனிதலாவது சீறுதல். காணகொடா ளென்றது வெறுப்புக்கொள்ளுகிருளென்றபடி] இது மகள் பாசுரமான பதிகம். தாய்க்கு மகள்மேல் சீற்றமும் வெறுப்பும் மிகமிகவுண்டாகியிருப்பதாக இதனுல் தெரியவருகிறது. இவையுண்டாகைக்குக் காரணமென்னவென்று பார்க்கவேணும். அது மகள் வாயினலேயே ஸ்பஷ்டமாக வெளிவந்துள்ளது எங்ஙனேயென்னில் "மேலும் வன்பழி நங்குடிக்கிவளென்று அன்னை காணகொடாள்'' "நிறைந்த வன் பழி நங்குடிக்கிவளென்று அன்னை காணகொடாள்'' "கழியமிக்கதோர் காதலள் இவளென்று அன்னை காணகொடாள்'' என்றன்ரே வசனவ்யக்தியுள்ளது. இம் மகளால் ப்ரபந்நஸந்தானத்திற்குப்பெரும்பழி விளையுமென்றும் திடமான அத்யவ

ஸாயங்கொண்டிருக்கையன்றிக்கே மேல்விழுந்து பதறுவதற்குறுப்பான எல்லை கடந்த அன்பையுடையவளா யிருக்கிருளிவளென்றும் வாய்விட்டுச் சொல்லியே யன்ரே தாயானவள் மகளை க்ஷேபிக்கின்ருள். மகள் பதறுவது ப்ரபந்நஸந்தானத் திற்குப் பெரும்பழியென்று தாயார் முடிவுகட்டினதாக இங்கு ஸ்பஷ்டமாகிறது. ஆனுல் மேலே (6-7.) *உண்ணுஞ்சோறு பருகுநீர்ப்பதிகத்திலே (பா. 4.) 'கொல்லை யென்பர்கொலோ! குணம் மிக்கனளென்பர் கொலோ!'' என்கிற பாசுரத்தை நோக்குமிடத்து இது நிர்த்தாரணம் பண்ணவொண்ணுத விஷயமென்று தாயார் கருதியிருப்பதாகத் தெரியவருகின்றது. இப்பாசுரத்தின் கருத்தாவது. என் மகளு டைய நடவடிக்கையை உலகத்தார் வெறுப்பர்களோ? அன்றி உகப்பர்களோ? பேறு தப்பாதென்று துணிந்திருப்பதே கடமையென்று திண்ணிய அத்யவஸாய முடையார் 'இவள் இங்ஙனே பதறுகையாவதென்? என்று வெறுக்கக்கூடும். 'பெறும்பேற்றின் கனமறிந்தால் அதற்குப் பதருமலிருக்கமுடியுமோ' என்றிருக் குமவர்கள் உகக்கக்கூடும். உலகத்தாருடைய நினைவை ஒருபடி நிர்ணயிக்க முடியாதாகையாலே, அவத்யம் சொல்லும்படி யாகுமோ? அன்றி சிலாகிக்கும்படி யாகுமோ தெரியவில்லையேயென்று தாயார் தளும்பி நிற்கும்படி இப்பாசுரத்தில் தெரியவருவதால் தாயின் கருத்தாலும் மகளுடைய பதற்றம் பரிபூர்ணமாகப் பழிக்கப்படுவதில்லையென்பது விளங்கும்.

மேலேயெடுத்த *எங்ஙனேயோபதிகத்தில் தாய்மார் சீறுவதைமட்டும் சொல்லி நில்லாமல் அவர்களோடு தோழிமார்களையுஞ்சேர்த்து அவர்களும் சீறுவ தாகச் சொல்லியிருக்கிறது. (9) *முன்னின்ருயென்று தோழிமார்களும் அன்னை யரும் முனிதிர்* என்றன்ரே பாசுரமுள்ளது. அன்றியும், மேலே * மானேய் நோக்குப்பதிகத்தில் (2.) ' என்றுகொல் தோழிமீர்காள்! எம்மைநீர் நலிந்தென் செய்தீரோ?'' என்று தோழி தாய்மாரோடு சேர்ந்து நலியுமளவேயன்றிக்கே தனிப்படவும் நலிவதாகக் காட்டப்படுகிறதே' இது பொருந்துமோ? தலைவிக்கு அந்தரங்கமாயிருப்பவளன்ரே தோழி. அவளும் நலிவதாகச் சொல்லத் தகுமோ வென்கிற சங்கை வலிதாகத் தோன்றும். இதற்குக் கேண்மின். தோழியானவள் தலைவியிடத்தில்மட்டும் அன்பு கொண்டு தாயாரோடு உடன்பட்டிருந்திலளாகில் அவள் தலைவியோடு கூடிவாழவே முடியாது. ''பூனைக்கும் தோழன், பாலுக்குங் காவல்'' என்கிற விநோதோக்திரீதியிலே தாய்ப்பக்ஷத்திலிருப்பதாகவும் காட்டிக் கொள்ளவேண்டும் தோழி. தோழி தாய் மகளாகிய மூவருடையவும் பாசுரங்களை ஆங்காங்கு உற்று நோக்கினுல் இன்சுவைமிக்க சில விசேஷங்கள் புலப்படும். சிறிது விவரிக்கிறேன். ''என் பெண்மகளையெள்கித் தோழிமார்பலர் கொண்டு போய்ச் செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன்'' என்கிற தாய்பாசுரத்தை நோக்கு மிடத்து தாயார் தோழிமார்மேல் பழியிடுவதாக விளங்கும். என் மகளுக்கு பகவத் வி யத்திலேயுண்டான அவகாஹனமாகிற அனர்த்தம் தோழிமார் பலராலே வந்ததையோ! என்றன்ரே இப்பாசுரத்தில் சொல்லிற்று. தோழி பாசுரமோ இத்ற்கு எதிராகவுள்ளது. தோழி சொல்லுவதாவது. ''குமுறுமோசை விழ வொலித் தொலைவில்லிமங்கலங் கொண்டுபுக்கு, அமுதமென்மொழியாளை நீர் உமக்காசையின்றியகற்றினீர்'' என்றும் ''கரைகொள் பைம்பொழில்தண்பணைத்

துலைவில்லிமங்கலம் கொண்டுபுக்கு, உரைகொளின்மொழியாளை நீர் உமக்காசையின்றி யகற்றினீர்'' என்றும் இங்ஙனேயுள்ளது. உத்ஸவாதி காலங்களில் கோவிலுக்குச் செல்லுகிற தாய்மார்கள் தாங்கள் தனியே போகாமல் இப்பெண் பிள்ளையை இடுப்பிலே கொண்டுபோய் 'கண்ணழகைப்பார், மூக்கழகைப்பார், ஆடையாபரணங்களின் அழகைப்பார்' என்று காட்டினபடியாலன்றோ இவ்வளர்த்தம் விளைந்தது! என்று தோழி தாய்மார்மீது பழியிடுவதையன்றோ இங்குக் காணுநின்றோம். இப்படி தாய்மாரும் தோழிமாரும் பரஸ்பரம் பழியிடுவதேயல்லாமல் இப்பழி இருவர்க்குமுள்ளதே யென்று தலைவி ஸ்தாபிப்பதையும் காண்கிறோம். எங்ஙனே யென்னில்; தலைவி பாசுரத்தில் "இணக்கியெம்மை யெந்தோழிமார் விளையாடப் போதுமினென்னப் போந்தோமை'' என்றுள்ளது. கண்ணே! நான் உன் வலையில் அகப்பட்டிருக்கவேமாட்டேன்; தோழிமாரன்றோ இணங்கவைத்தார்கள்! என்று இதில் சொன்னபடியால் தோழியர்மேல் பழி ஸ்தாபிக்கப்பட்டது. தலைவி பாசுரத்திலேயே "எங்ஙனேயோவன்னைமீர்காளென்னை முனிவது நீர்!'' என்று முன்னம் காட்டினதை யுற்றுநோக்குமளவில், தோழி தாய்மீது இட்டபழி தலைவியால் ஸ்தாபிக்கப் பட்டமை தெரியும். அன்னைமீர்காள்! நீர் என்னை முனிவது எங்ஙனே ? = நீங்களே ஆதியில் என்னை பகவத் விஷயத்திலீடுபடுத்திவிட்டு இப்போது சீறுவது நியாயமா? என்பது இவ்வடிக்கு ஆழ்ந்த கருத்து. ஆக. தலைவி தோழிமீதும் தாய்மீதும் பழியை ஸ்தாபித்தபடி விளக்கப்பட்டதாயிற்று.

அந்யாபதேசப் பாசுரங்களின் அந்தரங்கமான ஆராய்ச்சி.

7. தோழியானவள் தாய்மாரோடே கூடிநின்று தலைவியைக் கண்டிப்பதாகக் காட்டுவதும். தாய்மார்க்கு நன்மை சொல்லுவது போலவிருந்து தலைவிக்கு அந்தரங்கமாக நன்மை செய்வதும் பாசுரங்களில் காண்பதுண்டு. * எங்ஙனேயோ பதிகத்தில் "முன்னின்றுயென்று தோழிமார்களு மன்னையரும் முனிதிர்" என்கிற தலைவி பாசுரத்தினால் தோழி தாயோடு கூடித் தலைவியைக் கண்டிப்பது காணாடோம். "துவளில் மாமணி மாடமோங்கு துலைவில்லி மங்கலம் தொழுமிவளை. நீரினி யன்னைமீர்! உமக்காசையில்லைவிடுமினோ'' என்கிற தோழி பாசுரத்தை மேலெழ நோக்குமிடத்து 'தாய்மார்களே! அடங்காப் பிடாரியான இவளை விட்டுத் தொலையுங்கள்; இவள் எக்கேடாவது கெடட்டும்; இவள் நம்வழிவாராள்; இவளோடு உறவையறுத்துக் கொள்வதே நமக்குநலம்' என்று தாய்மார்க்கு நன்மை சொல்லுவதுபோல் காணப்படும். ஆழ்ந்து நோக்கின் தலைவிக்குத் துணை செய்வதே இதன் கருத்தாம். தாய்மார் க்ஷேபித்து மகளுடைய செய்கைகளைத் தடை செய்ய இடமில்லாதபடி பண்ணுவதன்றோ இங்குப் பலிப்பது. இது தலைவிக்குச் செய்த நன்மையேயாம், தலைவியானவள் தாய்மார் தோழிமாராகிற இரண்டு தலையையும் உதறிக் கைவிடுவதுமுண்டு; எங்கே கண்டதென்னில் "ஏலமலர்க் குழலன்னைமீர்காள்! என்னுடைத் தோழியர்காள்!- உங்களோடெங்களிடையில்லையே'' என்கிற தலைவி பாசுரத்தில் இது காணலாம். தலைவியினிடத்தில் தோழியர்க்கும் தாய்மார்க்கும் மஹத்தான கௌரவ ப்ரதிபத்தியுண்டென்பதையும் இவ்விருவர் பாசுரங்களிலும் நன்கு காண்கிறோம். * இவளை நீரினியன்னைமீர் உமக்காசையில்லைவிடுமினோ * என்று சொன்ன தோழிதானே "பின்னைகொல்

நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்!'' என்று கொண்டாடினமை காண்கிறோம் ''என்னெஞ்சினல் நோக்கிக் காணீர் என்னை முனியாதே'' என்று மகள் சொல்லும்படியாகச் சீற்றமும் வெறுப்புங் கொண்டிருந்த தாய்தானே * உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்றே யிருப்பளென்மகளென்றும், * ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவனுடையபேரும் தார்களுமே பிதற்றும்படி உலகத்தையெல்லாம் திருத்துமவளென்மகளென்றும் மற்றும் பலபடியாகவும் கொண்டாடிக் கூறுகின்றமை காணநின்றோம். ஆக, மகள் தோழி தாய்களுக்குப் பரஸ்பரம் ஐகமத்யக் குறைவுபோல் மேலெழக் காண்பதும், ஆழ்ந்த நோக்கில் மூவர்க்கு முண்டான அந்தரங்கவுகப்பு காண்பதும் ப்ரமாணரூடமாக நிரூபிக்கப்பட்டதாயிற்று.

ஜநகசக்ரவர்த்தியின் கந்யகாதானமும் நம்மாழ்வாருடைய கன்யகாதானமும்.

8. பெண்மையெய்தின ஆழ்வார் ஸாக்ஷாத் திருமாமகளே யென்பது இனி நிரூபிக்கப்படுகிறது. * காவியங்கண்ணியெண்ணில் கடிமாமலர்ப்பாவை யொப்பாள்* என்கிற திருமங்கையாழ்வார் பாசுரமும் *திருமகள்கொல் பிறந்திட்டாள்* என்கிற நம்மாழ்வார் பாசுரமும் அர்த்தவத்தென்று மூதலிக்கப் படுகின்றதென்க. ஜநககுல ஸுந்தரியான ஸீதாபிராட்டியாரும் நம்மாழ்வாருமொப்பர். எங்ஙனே? பிராட்டியானவள் *விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ* என்கிறபடியே ஒருபோதும், எம்பெருமானை விட்டுப் பிரியாதவள். *ராகவத்வே அபவத் ஸீதா* என்கிறபடியே ராமாவதாரத்தில் பெருமாளுக்குப் பத்தினியாக வாய்த்தவள். எம்பெருமான் *மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன்* என்கிறபடியே ஒருவர்க்கும் புத்திரனல்லாதவனாயிருக்கச் செய்தேயும் தசரதாதிகளுக்குப் புதல்வனாகப் பிறந்ததுபோல அவளும் ஒருவர்க்கும் புத்திரியல்லாதவளாயிருக்கச் செய்தேயும் ஜநகாதிகளுக்குப் புதல்வியாகப் பிறந்தாள். ஜநகசக்ரவர்த்தி மற்றவர்களைப் போலன்றிக்கே மஹா வேதாந்தியாகையாலே ''பகவத் திவ்ய மஹிஷியானவிவள் நம்முடைய புதல்வியல்லள்'' என்று தெளிந்திருக்கச் செய்தேயும் *இயம் ஸீதா மம ஸுதா* என்று கலங்கிச் சொல்லித் தனது புத்திரியாகப் பாவித்து அவளைப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்தார், இதுதான் ஸீதா விவாஹமென்பது. அதேபோல ப்ரக்ருதத்திலும் காணலாம். நம்மாழ்வாரை ஜனகசக்ரவர்த்தி ஸ்தானத்திலும், அவருடைய ஆத்மாவை ஸீதா பிராட்டி ஸ்தானத்திலும் கொள்க. இவ்வாத்மவஸ்து எம்பெருமானுடையதேயன்றித் தன்னுடையதன்று என்கிற தெளிவு ஆழ்வார்க்கு நன்றாகவுண்டு; ஆகவே தான் *உதவிக் கைம்மாறு என்னுயிரென்னவுற்றெண்ணில். அதுவுமற்றாங்கவன் தன்னது-அப்பனுக்கு எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே * என்று ஸித்தாந்தமாகப் பேசி முடித்தார். இங்ஙனே தெளிவு இருக்கச் செய்தேயும் உபகாரஸ்ம்ருதியாலே வந்த ஹர்ஷத்தாலே கலங்கி ''தோள்களையாரத் தழுவி யென்னுயிரை அறவிலை செய்தனன்'' என்று அவனுடையதான ஆத்மவஸ்துவை (தன்னதுபோல்) அவனுக்கு ஸமர்ப்பித்தார். ஆத்மவஸ்து அமூர்த்தமாயிருக்கச் செய்தேயும் தாளும் தோளுமாய்ப் பணைத்துத் தோற்ற [கன்னிகையைத் தழுவி வரனுக்குக் கொடுக்குமாபோலே] ஆத்ம வஸ்துவாகிற கன்னிகையைத் தழுவிக்

கொண்டு எம்பெருமானுகிற வரனுக்கு அநந்யார்ஹமாக ஸமர்ப்பித்தாராழ்வார். ஆக ஸீதா விவாஹம்போலே ஆழ்வார் விவாஹமும் தேறிற்று.

9. இரண்டு விவாஹத்திலும் கண்ட ஸந்தோஷாதிசயம் :

9. ஜனகர் தன்னதல்லாததைத் தன்னதாக ப்ரமித்துக் கொடுத்தாப்போலே ஆழ்வாரும் தம்மதல்லாத தொன்றைத் தம்மதாக ப்ரமித்துக் கொடுத்தார். பெற்றுக்கொண்ட பெருமானும் தன்னதல்லாத தொன்றைப் புதிதாகப் பெற்றுப் போலே. ப்ரமித்து அபரிமிதமாக அகமகிழ்ந்தானென்பது இரண்டிடத்திலும் காண லாயிருக்கின்றது. எங்ஙனே யென்னில்; ஸீதாவிவாஹ ஸமநந்தரம் * தயா ஸ ராஜர்ஷிஸுதோபிராமயா ஸமேயிவாந் உத்தமராஜகந்யயா, அதீவ ராமச் சுசுபே என்று வான்மீகி பேசும்படி, ஸந்தோஷாதிசயத்தாலே பெருமாள் மிக விளங்கிஞ ரென்று கண்டோம். இங்கு ஆழ்வார்விவாஹ ஸமனந்தரத்திலும் எம்பெருமான் அபரிமிதமாக மகிழ்ச்சிகொண்டதை ஆழ்வார் பாசுரத்தாலே நன்கு காண்கிறோம். "என்னுயிரை அறவிலை செய்தனன்" என்று சொல்லி ஆத்மஸமர்ப்பணம் பண்ணின வுடனே ஆழ்வார் கீழ்க்கண்ணாலே எம்பெருமானை நோக்கினுர்; 'நாம் தவறுதலாக ஸமர்ப்பித்தற்கு எம்பெருமான் திருவுள்ளம் புண்பட்டிருக்குமோ! என்று அஞ்சி நோக்கினுர்; அவனே இவர் ஸமர்ப்பித்த ஆத்மவஸ்துவைப்பெற்ற ஹர்ஷாதி சயத்தாலே பளபளவென்று விளங்குவதும், தன்னுடைய திவ்யாவயவங்கள் சத சாகமாகப் பணைப்பதுமாயிருந்தான்; அதனைக்கண்ட ஆழ்வார் "சோதி! தோள் களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய் தாள்களா யிரத்தாய்" என்று சொல்லி 'நான் தவறுதலாகச்செய்த செயலாலும் இப்படி ஹர்ஷங் கொள்வதே!' என்று வியந்தார். ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணின அடுத்த க்ஷணத்திலன்றோ இது. [ஜன்மபூமியில் பாசமற்றமை பிராட்டிக்குமாழ்வார்க்கு மொக்கும்படி:—] பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்தபின்பு பன்னிரண்டாண்டு திருவயோத்தியில் வாழ்ச்செய்தேயும் ஒருநாளும் மிதிலைக்குச் சென்றறியாள் விச்லேஷபீதியாலே; இதனை அவள்தானே தன்வாக்காலே சொல்லிவைத்தாள். (ஆரண்ய 47-4.) இராவணனோடு வார்த்தையாடும்போது 'ஸமா: த்வாதச தத் ராஹம் ராகவஸ்ய நிவேசநே. புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம் ருத்திநீ" என்றாள். மேல் ஸுந்தரகாண்டத்தில் (33–18.) திருவடியோடு வார்த்தையாடும்போதும் இதே வார்த்தையைச் சொல்லியிருக்கின்றாள். விவாஹத் திற்குப் பிறகு பன்னிரண்டாண்டு திருவயோத்தியில் அமாநுஷ போகங்களை யநு பவித்துக்கொண்டு பெருமாளோடே கூடிவாழ்ந்தபடியைச் சொன்னாள் இதனால். இதில் ஸமா: என்றது த்விதீயாபஹுவசனம். வியாகரணத்தில் "காலாத்வநோரத் யந்த ஸம்யோகே த்விதீயா' என்பது ஸூத்ரமாகையாலே அவிச்சின்னமாகப் பன்னிரண்டாண்டு உடன்கூடி வாழ்ந்தபடியை இந்த த்விதீயாவிபக்தி தெரிவிக் கும். ஆக, பிராட்டி பெருமாளைக் கைப்பிடித்தபின்பு மிதிலையை மிதித்தறியா ளென்பது தேறிற்று. ஆழ்வாரும் *கடையறப் பாசங்கள் விட்டபின்னையன்றி அவனவை காண்கொடானே* என்றும். *பாதமடைவதன் பாசத்தாலே மற்ற வன்பாசங்கள் முற்றவிட்டுக் கோதில் புகழ்க் கண்ணன் தன்னடிமேல்* என்று முள்ள பாசுரங்களினால் அதே நிலைமையைத் தமக்குத் தெரிவித்துக்கொண்டார்.

இங்ஙனே மற்றும் பல பொருத்தங்களுண்டு. இனி இரண்டாம்பகுதி.

* துயரறுசுடரடிதொழுதெழு. *

10. முதற்பாசுரத்தின் ஈற்றடி *துயரறுசுடரடி தொழுதெழென் மனனே!* என்றுள்ளது. (துயரறு) என்பதற்கு—'துயர்களை யறுக்கின்ற என்று பொருள் தோன்றும். யாருடைய துயர்களை? என்று கேள்விவரலாம். *ஆபதாம் அப ஹர்த்தாரம் *ஆர்த்தானும் ஆர்த்திஹந்தாரம்* *ப்ரணதார்த்திஹரம்* இத்யாதி ப்ரமாணங்களின்படியே துயருற்றவர்களின் துயர்களையறுக்கும் என்று ஸமாதான மடையலாம். ஆக, துயரறுசுடரடி என்பதற்கு—அடியார்களது துயரங்களை யெல் லாம் போக்கி அதனுல் ஒளிபெற்று விளங்குகின்ற திருவடி என்று பொருள் தேறிற்ரும் இப்பொருளில் எவ்விதமான குறையும் சொல்லப்போகாது. ஆனுல் எம்பெருமானுர் இங்கு அருளிச்செய்யும்பொருள் இன்சுவை மிக்கதாகவுள்ளது. 'துயரறுக்கும்' என்று கொள்ளாமல் 'துயரறும்' என்றே நிர்வஹித்தருளினர் எம்பெருமானுர். இவ்வாழ்வார்தாமே மேலே இரண்டாம்பத்து முடிவில் திருமா லிருஞ்சோலைப் பதிகத்தில் *மலமறுமதிசேர் மாலிருஞ்சோலை* என்கிருர். இங்கு 'மலமறு' என்பதற்கு 'தான் களங்கமற்றதான' என்று பொருளே தவிர, 'பிற ருடைய களங்கத்தையறுப்பதான' என்று பொருளில்லையன்ரே. அதேபோல 'துயரறு' என்னுமிவ்விடத்திலும் 'தான் துயரறுகிற' என்று பொருள்படுவது ஸ்வரஸமேயாகும். ஸ்ரீராமாயணத்தில் சக்ரவர்த்தி திருமகனுருடைய திருக் குணங்களைப் பேசுகின்ற பௌரஜனங்கள் *பஹவோ ந்ருப! கல்யாணகுணா: புத் ரஸ்ய ஸந்தி தே* என்று பீடிகையிட்டுச் சொல்லி வருகையில் அந்த கல்யாண குணங்களினிடையிலே *வ்யஸநேஷு மனுஷ்யாணும் ப்ருசம் பவதி து:க்கித:* என்று—பிறர் துயருற, பெருமாள் தாம் துயருறுவதாகச் சொல்லியிருக்கையாலே துயருற்ற பிறர் துயரறும்போது எம்பெருமான் தான் துயரற்றவனுக ப்ராப்தமே யன்ரே. அதே ஸ்ரீராமாயணத்தில் *அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம், க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ* என்றுள் ளதையும் இங்குக்காணவேணும். ராவணதிக்காரத்தாலே துயருற்றிருந்த விபீஷ ணுழ்வான் துயர்தீரப் பெற்றுனென்று சொல்லவேண்டிற்றுயிருக்க, அது சொல் லாதே பெருமாள் தாம் துயர்தீர்ந்தாராகவன்ரே வான்மீகி முனிவர் சொல் லிற்று. 'விபீஷணம் அபிஷிச்ய ராம: ப்ரமுமோத' என்னுமளவே போதுமாயிருக்க "விஜ்வர:" என்று விசேஷணமிட்டிருப்பதைக் குறிக்கொள்ளவேணும். எம்பெரு மானுர் திருவுள்ளத்தில் இங்ஙனே பொருள்தோன்ற வேண்டியகாரணம் கேண் மின். தொடங்கும்போதே *உயர்வற வுயர்நலமுடையவன்* என்ருராழ்வார். 'சிறந்த திருக்குணங்களை யுடையவன்' என்கிற விவக்ஷைக்குச் சேர *உயர்நல முடையவன்* என்ருல் போதும் 'உயர்வற' என்று விசேஷித்ததன்கருத்து என்ன வென்ருல், ஒவ்வொரு குணத்திலும் அதிசயத்தின் பரமகாஷ்டையுள்ளவளவும் உடையவன்-என்பதன்ரே இங்குத் தேறுங் கருத்து, பிறரது துயரைத் தீர்க்கை குணத்தின் கீழ்ப்படியாய், அந்தத் துயரத்தைத் தன் துயராக நினைத்திருந்து அது தீர்ந்தவாறே தன் துயர் தீர்ந்ததாக ஆனந்தப்படுகையன்ரே மேலெல்லையா யிருக்கும். ஆகவே அந்த முதலடிக்குச் சேர எம்பெருமானுர் பொருள் பணித்தது மிகப் பொருத்தமானது. ... ... .... ... (*)

*' என்னீர்மை கண்டிரங்கி யிதுதகாதென்னுத.''*

11. தூதுவிடும்பதிகமான *அஞ்சிறையமடநாரையில் (பா 4.) * என் னீர்மை கண்டிரங்கி இதுதகாதென்னுத, என்னீல முகில் வண்ணர்க்கு என் சொல்லி யான் சொல்லுகேனே?* என்றுள்ளது. சில பறவைகளை நோக்கிச் சொல்லுகிற வார்த்தை யிது; ''எனது நிலைமையைக் கண்டு இரங்கி இவளை நாம் உபேக்ஷித்திருப்பது தகாது என்றிராதவர்க்கு என்ன வார்த்தை சொல்லுவது!'' என்பதாக இதற்குப் பொருளாகிறது. இது பிரிவில் சொல்லுகிற வார்த்தை யாகையாலே 'என்னீர்மை கேட்டிரங்கி' என்றிருக்கவேணும். இவளிருக்கு மிருப்பைப் பிரிவு காலத்தில் யாரேனுஞ் சொல்லக் கேட்கலாமே யொழிய, நாயகன் தான் காணமுடியாதன்றே. ஆகவே, * என்னீர்மை கேட்டிரங்கி * என்று பாசுரமிருக்கவேணுமே யல்லது * என்னீர்மை கண்டிரங்கி * என்று இருக்கத்தகாதே யென்று சங்கித்த வொரு தமிழ்ப் பண்டிதன் பட்டரிடத்தில் வந்து இந்த சங்கையைத் தெரிவித்தான்; இது கேட்டருளின பட்டர் ''பண்டிதரே; நன்கு கேட்டீர்; ஆனால், *புல்லிக்கிடந்தேன் புடை பெயர்ந்தேன் அவ்வளவில், அள்ளிக் கொள்வற்றே பசப்பு* என்ற குறளும், *ஊருண்கேணி உண்டுறைத் தொக்க பாசியற்றே பசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே* என்கிற குறுந்தொகைச் செய்யுளும் உமக்குத் தெரியாது போலும்'' என்றருளிச் செய்து, இவற்றைப் பரக்க உபந்யஸித்து அப் பண்டிதனைத் தெளிவித்தருளினர்.

இதன் விவரணம் வருமாறு. * புல்லிக் கிடந்தேன்* என்ற குறள் திருக் குறளில் பசப்புறு பருவரலென்னுமதிகாரத்தில் ஏழாவதாகும். இது நாயகியின் பேச்சு. 'முன்பொரு நாள் நான் காதலரை அழுந்தத் தழுவிக் கிடந்தேன்; கை மாறுவதற்காகச் சிறிது புடை பெயர்ந்தேன்; ஒரு நொடிப் பொழுது விலகின மாத்திரத்திலும் பசலை நிறம் வந்து உடம்பெல்லாம் மூடிக்கொண்டது—என்பது இக்குறளின் பொருள். இதனுல், நாயகனைப் பிரியாமல் கூடியிருக்கிற காலத்தி லேயே படும் அலமாப்பு தெரியவரும். இனி, குறுந்தொகைச் செய்யுள் இக் கருத்தையே வேறுவகையில் வெளியிட்டுள்ளது. (குறுந்தொகையில் இச்செய்யுள் முந்நூற்றுத் தொண்ணூற்றுென்பதாவது.) ஊருண்கேணி உண்டுறைத்தொக்க பாசியற்றே பசலை=ஊரிலுள்ள மக்களாலே நீரெடுத்து உண்ணப்பெறுகிற கேணி யினுள்ளே படர்ந்துகிடக்கும் பாசிபோன்றது பசலை நிறம். [பாசியின் தன்மை எத்தகைத் தென்றல், தண்ணீரில் நாம் கைவைத்தோமாகில் கைபட்ட விடங் களில் பாசி நீங்கும்; கையை எடுத்துவிட்டோமாகில் உடனே நீங்கின பாசி மூடிக் கொள்ளும். பசலை நிறம் இதுபோன்றதோ வென்னில்;] காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி=நாயகன் தொட்ட தொட்ட விடங்கள் தோறும் பசலை நிறம் நீங்கி; விடுவுழி விடுவுழி பரத்தலான்=விட்ட விடங்கள்தோறும் அது வியாபிப்பத னலே யென்கை. பிரிவாற்ருமையினுல் மாதர்களின் மேனியில் தோன்றும் நிற வேறுபாடு பசலை நிறமெனப்படும். நாயகனை விட்டுப் பிரிந்த காலத்திலே நாயகி யின் உடலில் இந்த நிறவேறுபாடு தோன்றுவது ஆச்சரியமன்று. ஒரு படுக்கை யிலேயே படுத்துக் கூடியிருக்கும்போதே க்ஷணகாலம் கை நெகிழ்ந்தவளவில்

இந்தப் பசலை நிறம் படர்கின்றதென்றால் பிரிந்த நிலையில் கேட்க வேண்டியதில்லை யன்றோ. பட்டரிடத்தில் கேள்வி கேட்ட தமிழனுக்கு இப்போது என்ன ஸமாதான மாயிற்றென்னில்; தூதுபாசுரம் பிரிவுகாலத்திற் சொல்லுவதானாலும், பண்டு கூடி யிருந்தகாலத்தில் நிகழ்ந்த ஸம்பவத்தையே [என்னீர்மை யென்பதனால்] நினைப் பூட்டுவதாநலால் கேட்டிரங்கி என்ன வேண்டுவதில்லை, கண்டிரங்கி யென்றே சொல்லத்தகும் என்றதாயிற்று. [அடையவளைந்தா னரும்பதவுரையில் செய்யுட் பாடத்தையே வேறுபடுத்திப் பொருளையும் மாறுபடுத்தியிருப்பது,] அவர்களுக்கு ஆகரம் தெரியாமையினாலே யென்க. பண்டைச் சங்கநூல்களிலும் பட்டர்க்கு இருந்த அவகாஹநாதிசயம் இதனால் அறியவெளிதாம். .... ... (*)

*"உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கனவே".*

12. (2-6)*வைகுந்தாமணிவண்ணனே யென்னும் பதிகத்தில் முதற்பாட்டில் "உன்னை நான் பிடித்தேன்கொள் சிக்கனவே* என்பது ஈற்றடி. இதன் மரும மறிந்து வியாக்கியானம் செய்தருளாநின்ற ஆசாரியர்கள் ஆழ்ந்து பணித்துள்ள சீரிய பொருளை யார்க்கு எடுத்துரைப்பது? ரஸிகர்களுக்கு உரைக்கின்றேன். கீழ் *அந்தாமத்தன்பு செய்து* என்னும் பதிகத்திலே எம்பெருமான் ஆழ்வாருடனே வந்து கலந்து தான் பெருப்பேறு பெற்றானாயிருந்தான். அப்படியிருக்கச் செய்தே ஆழ்வார் "அல்லாவியுள்கலந்த" வென்று தம்முடைய நைச்சியத்தைக் காட்டி 'ஐயோ! பொருளல்லாத வென்னோடே இப்படி கலந்து ஏகதத்வ மென்னலாம்படி கிடக்கிறானே!' என்று தலைசீய்த்துப் பேசினார். அதிலிருந்து எம்பெருமானுக்கு ஒரு கலக்க முண்டாயிற்று; 'ஆழ்வார் *வளவேழுலகு பதிகத்திற்போலே நைச்சிய மநுஸந்திக்கத் தொடங்கிவிட்டாரே! நம்மை விட்டிடுவர் போலிருக்கிறதே! இவரைப் பிரிந்து நாம் எப்படி தரித்திருப்பது! என்று நைந்து கிடந்தான்; அதனை யறிந்த ஆழ்வார் அவனுக்கு அபயப்ரதானம் பண்ணுகிறார் *உன்னை நான் பிடித் தேன்கொள் சிக்கனவே* என்று. எம்பெருமான் கீதையில்) சரமச்லோகத்தில் (மா சுச:) என்று சொல்லி நம்முடைய சோகநிவ்ருத்தியைப் பண்ணினதுபோல இப் பாசுரம் ஆழ்வார் எம்பெருமானுக்கு [மா சுச:] சொல்லுவது—என்று வியாக் கியானம் செய்தருளுகிறார்கள். திருவாய்மொழி நூற்றந்தாதியில் இது ஸுவ்யக்த மாகக் காணலாம்; அவ்விடத்துப் பாசுரம் வருமாறு: 'வைகுந்தன் வந்து கலந்த தற்பின் வாழ்மாறன், செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து—நைகின்ற தன்மை தனைக் கண்டு உன்னைத் தான் விடேனென்றுரைக்க, வன்மை யடைந்தான் கேசவன்" என்பதாம். மாறன் செய்கின்ற நைச்சியத்தைச் சிந்தித்து எம்பெருமான் நைந்தானென்றும், அதுகண்டு ஆழ்வார் அவனைத் தேற்றினாரென்றும் நம் ஆசாரியர்கள் நிர்வஹிக்குமிது மூலத்திற்கு மிகவும் இணங்கியதேயல்லது ஏறிட்டுரைக்குமதன்று. ஆக, எம்பெருமானுடைய விச்லேஷம் ஆழ்வார்க்கு அஸஹ்யமென்பது எப்படி ப்ரமாண ஸித்தமோ அப்படியே ஆழ்வாருடைய விச் லேஷமும் எம்பெருமானுக்கு அஸஹ்யமென்பதும் ப்ரமாண ஸித்தமே யென்று கண்டுகொள்க. இது கொண்டே ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் * க்ஷணேபி தே யத் விரஹ: அதி துஸ்ஸஹ:* என்றருளிச் செய்தார்.

ஆளவந்தார் அருளிச்செய்வதெல்லாம் அருளிச்செயற்கடலில் அவருக்கிருந்த அவகாஹநாதிசயத்தைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டி நிற்கும்.*

* சொன்னுல் விரோதப்பதிகத்திற்கு ஸங்கதி *

13. மூன்ரும்பத்தில் ஒன்பதாவது பதிகம் *சொன்னுல் விரோதம். இப்பதிகம் அவதரித்திருப்பதை உற்று நோக்குமிடத்து, கீழ்ப்பதிகத்திற்கும் இப்பதிகத்திற்கும் ஸங்கதி ஒத்துவரவில்லைபோல் தோன்றும். கீழே எட்டாவதுபதிகம் *முடியானே! என்பது. அதில் ஆழ்வார் ஸந்தோஷாநுபவம் செய்திலர்; ஸங்கடமேயநுபவித்திருக்கிருர். அதற்கடுத்ததான இந்த *சொன்னுல்விரோதப் பதிகத்தில் நரஸ்துதி பண்ணி நாசமடையும் கவிகளைக்குறித்துத் தாம் கிலேசப்படுகிருர். ஆழ்வார் தாம் படுகிற சங்கடத்திற்குப் பரிஹாரம் பெருமல் பிறர்படும் துயரத்திலே கண்வைத்தது எதனுலே? என்று பார்க்கவேணும். கீழ்ப்பதிகத்தோடு இப்பதிகத்திற்கு ஸங்கதி இல்லைபோல் தோன்றும். இங்கு ஆசார்யர்கள் காட்டியருளும் ஸங்கதி காணீர். கீழ்ப்பதிகத்தில் ஆழ்வார் பட்ட கிலேசம் விலக்ஷணமானது. இப்படி பகவத் விஷயத்திலீடுபட்டுக் கிலேசப்படுவார் இந்நிலவுலகத்தில் இன்னும் யாரேனுமுளரோ வென்றுபார்த்தார். அவரவர்கள் அஸேவ்ய ஸேவை பண்ணுவதும் துதிக்கத் தகாதவர்களைத் துதிப்பதுமான தீய செயல்களில் ஈடுபட்டுக் கிடந்தார்கள். அவர்கள் கருத்தாலே அது துக்கமன்ருகிலும் ஆழ்வார் திருவுள்ளத்திலே அது மிகுந்த இடராகத்தோன்றியது. உண்மையில் அது இடரேயன்ரே. மஹான்கள் தமது இழவுக்கு நோவதைக் காட்டிலும் பிறருடைய இழவுக்கு நோவதையே பெரும்பாலுங் கொண்டவர்களாதலால், ஆழ்வார் தம்மிழவை மறந்து அந்த ஸம்ஸாரிகளின் இழவுக்கு நொந்து உபதேச முகத்தாலே அவர்களது இழவை அகற்றப் பார்க்கிருா—என்று ஸங்கதி காட்டுகிருர்கள். இங்கு ஆசார்யர்களின் அற்புதமான ஸ்ரீஸூக்தியொன்று... "வாளேறுகாணத் தேளேறு மாயுமாப்போலே" என்று. ஒருவன் தேள்கொட்டி வருந்திச் செல்லாநிற்க, எதிரேயொருவன் வாளால் கைகளறுக்கப்பட்டுக் கதறிக்கதறி வாராநிற்க, அந்தப் பெருந்துயரத்தைக் கண்டவாறே தனது சிறு துயரம் தொலைந்துபோமன்ரே. அதுபோல ஸம்ஸாரிகளின் பிரபலமான அனர்த்தத்தைக் கண்டவாறே ஆழ்வார் தமது துக்கத்தை அற்பமாகவெண்ணி இதை மறந்து பிறரிழவு பரிஹரிக்கப் பார்க்கிருர் என்றதாயிற்று. இது மிகப் பொருத்தமான ஸங்கதியாகும். ... (*)

*சன்மம் பலபல பதிகத்திற்கு ஸங்கதி*

14. *சொன்னுல் விரோதப் பதிகத்திற்கு அடுத்தது *சன்மம் பலபல பதிகம். இதனை நோக்குமிடத்தும், கீழ்ப்பதிகத்திற்கும் இப்பதிகத்திற்கும் ஸங்கதி ஒத்துவரவில்லைபோல் தோன்றும். பிறரிழவைப் பரிஹரிக்கப் பார்த்தார் கீழ்ப்பதிகத்திலேயென்று தெரிந்துகொண்டோம். இப்பதிகத்திலோ வென்னில், தாம் அபரிமிதமாக பகவத்குணுநுபவம் பண்ணிக் களித்துக் கூத்தாடுகிருர். திடீரென்று இதற்கு என்ன ப்ரஸக்தி? என்று சங்கிக்க நேரும். கேண்மின். கீழ்ப்பதிகத்தில் ஸம்ஸாரிகளுக்குப் பண்ணின உபதேசம் பலிக்கவில்லை. உலக வியற்கையைக் காணுமிடத்து, தீயவழிகளிற் செல்லும் மனோரதங்கள் சடக்கென நிறை

வேறி விடுவதையும், நல் வழிகளிற்செல்லும் மனோரதங்கள் சிறிதும்நிறைவேருமற் போவதையும் காணு நின்றோம். இராமபிரானுடைய மகுடாபிஷேகத்தைக் குலைக்க மந்தரை செய்த சூழ்ச்சி அநாயாஸமாக நிறைவேறிற்று. பிராட்டியை யபஹரிக்க இராவணன் செய்த சூழ்ச்சியும் (மாரீசன் மூலமாக) அநாயாஸமாய் நிறைவேறிற்று. அந்த ராவணனுக்குப் பிராட்டி, மாரீசன், மால்யவான், மாருதி. விபீஷணுழ்வான் முதலானுர் பலர் செய்த வுபதேசங்கள் அத்தனையும் பழுதுபட்டன. *பூயாநஹோ பரிகர: ஹ்ருதிகூலபக்ஷே* என்ற கூரத்தாழ்வான் ஸ்ரீஸூக்தியே பெரும்பாலும் வெற்றி பெறுகின்றது. ஆகவே, கீழ்ப்பதிகத்தில் ஸம்ஸாரிகளுக்கு ஆழ்வார் செய்தருளின நல்லுபதேசம் பலிக்கவில்லை. அதனுல் ஆழ்வார்க்கு ஒருபுறத்தில் நிர்வேதமிருக்கச் செய்தேயும் ஒருபுறத்தில் மகிழ்ச்சியுமுண்டாயிற்று. எதனு லென்னில்; வழிபறிப்பார் மலிந்தவிடங்களிலே கைப்பொருள் கொண்டு தப்பினுர் மகிழுமாபோலே. (அதாவது) கள்ளர் மலிந்த வழியொன்று; அவ்வழியில் செல் பவர்கள் அரையிலுடுத்த ஆடையுமுட்பட ஸர்வஸ்வத்தையுமிழந்து பரிதாபத் துடனே செல்லாநிற்க, அதேவழியிற் செல்லுகின்ற வேறுசிலர் ஒருவகையான ஆபத்துமின்றிக்கே ஸுரக்ஷிதர்களாய்ச் சென்றுர்களாம். அவ்வழியிற் சென்ற பிறர் அனர்த்தப்பட்டதைக் கேள்விப்பட்டவிவர்கள் "தைவாதீனமாக நமக்கு ஒருவகையான அனர்த்தமுமில்லை யாயிற்றே; நம்முடைய பாக்கியமே பாக்கியம்" என்று பரமானந்தமெய்திக் கூத்தாடுவர்களன்றே. அப்படியே ஆழ்வாரும் 'ஸம் ஸாரிகள் பலபலவகையாக அனர்த்தப்பட்டுத் தொலையுமிந்நிலத்திலே நாம் அவர் களைப்போலே தொலைந்துபோகாமே இங்ஙனே பகவத் குணுநுபவம் பண்ணப் பெற்றோமே!' என்று தாம்பெற்ற பேற்றையெண்ணிக் களிக்கிருரென்பது ஸங்கதி.

"திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின்."

15. திருவாய்மொழி ஐந்தாவது பத்தில் *எங்ஙனேயோவன்னைமீர்காள்!* என்று தொடங்கும் ஐந்தாவது பதிகம் திருக்குறுங்குடி விஷயமானது. இதில் பாசுரந்தோறும் "திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின்" என்னும் வாக்கி யம் தவருமல் வருகின்றது. இதிலிருந்து ஒரு விசேஷம் குறிக்கொள்ளத்தக்க தாகும். இந்த திவ்யதேசத்தில் நம்பாடுவான்சரிதைலோக ப்ரஸித்தமானது; புரா ணப் ரஸித்தமுமானது. அது நம்மாழ்வார் காலத்திற்கு மிகமுந்தியதே யாதலால் அதை ஆழ்வார் தம்முடைய ஸ்ரீஸூக்தியில் அநுஸந்திக்க வேண்டியது அவசிய மாகும். ஆலங்காரிக ரீதியில் அநுஸந்திப்பது பலவகைப்படும். அலங்கார சாஸ்த்ரத்தில்*ஸூச்யார்த்தஸூசனம் முத்ரா ப்ரக்ருதார்த்த பரை: பதை:* என்று லக்ஷணம் கூறப்பெற்ற முத்ராலங்காரவகையில் இங்கு நம்பாடுவான் கதை நினைப் பூட்டப்படுகிறது. எங்ஙனேயென்னில்; சண்டாள யோனியிற் பிறந்த நம்பாடு வான் கார்த்திகை மாதத்து சுக்லபக்ஷ ஏகாதசியன்றிரா வழக்கப்படி வீணையுங் கையுமாய்ப் புறப்பட்டுத் திருக்குறுங்குடி நம்பியை கானத்தினுலுகப்பிக்கச் செல்லும் வழியில் ப்ரஹ்மரக்ஷஸ்ஸின்கையிலே பிடியுண்டான்; இவனை அவன் தின்றுவிடுவதாக இருக்கையில் 'நம்பியை நான் ஸேவித்துவிட்டு அதன்பின் இங்கு வருகிறேன்; அப்போது என்னை நீ பக்ஷிக்கலாம்' என்கிருன் நம்பாடுவான்.

இப்பேச்சில் பிரமராக்ஷசன் நம்பிக்கை கொள்ளாதிருக்க, நம்பாடுவான் 'திருக் குறுங்குடி நம்பியை நான் கண்டுவிட்டு அதன்பின் தவறாது வருகிறேன்; வந்தி லேனாகில் இன்ன இன்ன பாவத்திலே புகுகிறேன்' என்று பலகால் சபதங்கள் செய்கிறான், அதனை இங்கு ஆழ்வார் ஸ்வாநுபவமுகேந "திருக்குறுங்குடிநம்பியை நான் கண்டபின்" என்று பலகால் சொல்லி ஸூசிப்பிக்கிறாராயிற்று. மேலே ஏழாம்பத்தில் (3-8.)* அலர் தூற்றிற்றது முதலாக் கொண்டவென் காதல்* என் றருளிச் செய்வதுபோல இங்கும் "நம்பியை நான் கண்டது முதலாக" என்னப் பாங்காகும். அங்ஙனன்றிக்கே *நம்பியை நான் கண்டபின்* என்றருளிச் செய்த திலிருந்தும் நம்பாடுவான்வாக்கின் அநுவாதம் முத்ராலங்கார ரீதியில் நன்கு தேறுகின்ற தென்னக் குறையில்லை. ... ... ... (*)

"அசைவிலுலகம் பரவக் கிடந்தாய்"

16. திருவாய்மொழியில் (5-8.) *ஆராவமுதே யென்கிற திருக்குடந்தைப் பதிகத்தில் (பா-9.) *இசைவித் தென்னை* என்கிற பாசுரத்தின் ஈற்றடியில் *அசை விலுலகம் பரவக் கிடந்தாய்* என்றுள்ளது. இவ்விடத்திலும் ஆலங்காரிகப்ரக்ரி யையில் ஒரு விசேஷவ்ருத்தாந்த ஸூசனையுள்ளது. எம்பெருமானுடைய சயனத்திருக்கோலத்திலே மிக்க ஈடுபாடுடையவரான திருமழிசைப்பிரான் கச்சி வெஃகாவில் அப்பெருமானுடைய எல்லைகடந்த ஸௌலப்யத்தை அநுபவித்தது போல திருக்குடந்தையிலும் ஆராவமுதாழ்வாருடைய ஒரு ஸௌலப்ய விசேஷத் தை யநுபவித்திருக்கிறார். இரண்டிடத்திலும் அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து காட்டியருளின ஸௌலப்யமே; திருவெஃகாவில் *போகின்ற கணிகண்ணன் பின் போன மழிசையர்க்காப் பைந்நாகப்பாய் சுருட்டிக் கொண்டெழுந்த பரஞ்சோதீ!* என்னும் படியாயிற்று. திருக்குடந்தையிலோ வென்னில், அவ்வாழ்வார் தாமே *நடந்த கால்கள் நொந்தவோ? நடுங்க ஞாலமேனமாய், இடந்த மெய் குலுங்க வோ?..................காவிரிக்கரைக் குடந்தையுள் கிடந்தவாறு?* என்று வினவி. உடனே *எழுந்திருந்து பேசு* என்றார்; ஆராவமுதன் அதற்கு உவந்து உடனே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து எழுந்தமை தோற்றவிருக்க அதுகண்ட ஆழ்வார் வாழிகேசனே! என்று அந்த ஸௌலப்ய குணத்திற்கு மங்களா சாஸனம் செய்தருளினார். இது தோன்ற இற்றைக்கும் அப்பெருமான் உத்தான சாயியாக ஸேவை ஸாதிப்பது காண்கிறோம். இதுதன்னை நம்மாழ்வார் *அசைவில் உலகம் பரவக்கிடந்தாய்! காணவாராயே* என்ற சந்தையினால் ஸூசிப்பித்தருளினரா யிற்று. அசைவில்—அசைந்து காட்டியதனால், உலகம் பரவக் கிடந்தாய்!—இந்த ஸௌலப்ய குணத்தை உலகமெல்லாம் கொண்டாடும்படி சயனித்திருப்பவனே!, காணவாராய்—அவ்வாழ்வார்க்காக அர்ச்சாஸமாதியைக் கடந்து எழுந்ததுபோல; அடியேனுக்காக நடந்து வந்தருளவேணும் என்றவாறு. இப்பாசுரத்தின் மூன்றா மடியியில் *செழுமாமணிகள் சேரும்* என்றவிடத்து ஈட்டில் திருமழிசைப் பிரானை நினைப்பூட்டியருளியுள்ளார் நம்பிள்ளை. ... ... ... (*)

*"ஆளுமாளார் ஆழியுஞ்சங்கும் சுமப்பார் தாம்."

17. திருவாய்மொழி எட்டாம்பத்தில் மூன்றாம் பதிகத்தில் மூன்றாம் பாசுரம் *ஆளுமாளார் ஆழியுஞ் சங்கும் சுமப்பார்தாம், வாளும் வில்லுங்கொண்டு பின்

செல்வார் மற்றில்லை* என்பது வெகு விலக்ஷணமானது. எம்பெருமான் பக்கலில் பரிவு கொண்டு மங்களாசாஸனம் செய்து அதுகாரணமாகவே பெரியாழ்வாரென்று பெயர் பெற்ற பட்டர்பிரான் பெருமையும் இப் பாசுரத்தின் கீழே சிறுமை பெற்ற தாயிற்று. எம்பெருமானுடைய ஞானம் சக்தி க்ஷமா தயா வாத்ஸல்யம் முதலான திருக்குணங்களிற் காட்டிலும் மிக விஞ்சியவை இரண்டு குணங்கள். அவைதாம் ஸௌந்தர்யம் ஸௌகுமார்யம் எனப்படும். இவ்விரண்டினுள்ளும் 'ஸௌகுமார்யம்' என்பது மிகச் சிறந்தது. எம்பெருமானுக்குத் திருமேனியே கிடையாதென்று வாதிப்பவர்கள் கிடக்கட்டும். *காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனி* என்கிற பாசுரத்தை நோக்குமிடத்து எம்பெருமான் நம்மாழ்வார்க்குத் தன்வடி வழகைக் காட்டியே காதலைப் பொங்கி வளரும்படி செய்தானென்பது செவ்வனே தெரிகின்றது. திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகத்திலே * மின்னிலங்கு திருவுருவும் பெரியதோளும் கரிமுனிந்த கைத்தலமும் கண்ணும் வாயும், தன்னலர்ந்த நறுந்துழாய் மலரின் கீழே தாழ்ந்திலங்கு மகரஞ்சேர் குழையுங்காட்டி ...புனலரங்க மூரென்று போயினரே * என்றருளிச் செய்த பாசுரம் எம்பெருமானுடைய திருமேனியழகிலே நாஸ்திகருடைய நெஞ்சையும் ஈடு படுத்தவற்றாயிருக்கும். அத்தகைய வடிவழகுக்கு மேலே ஸௌகுமார்யமென்பதோ சிந்திக்கவே முடியாதது. அதைச் சிந்திப்பவர் மிகச் சிலரேயாவர். ஆழ்வார்கள் பதின்மருள் நம்மாழ்வாரொருவரே அதைச்சிந்தித்தவரென்னலாம். அந்த ஸௌகுமார்ய சிந்தனையின் பரீவாஹரூபமாக வெளிவந்த பாசுரமன்றோ *ஆளுமாளார் ஆழியும் சங்கும் சுமப்பார்தாம் * என்கிறவிது. ஆளும் ஆளார்=எம்பெருமான் ஒரு பணிவிடைக் காரனைத் தன்னிடம் குற்றேவல் செய்ய வைத்துக் கொள்ளவில்லையே என்பது இதன் பொருள். உபய விபூதியும் அவனுக்கு ஆளாயிருக்க, ஆழ்வார் இங்ஙனே சொல்வது எதனாலே யென்னில்; ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்=ஆள் இருந்தால் திருவாழி திருச்சங்குகளைத் தாமே சுமப்பரோ? மடாதிபதிகள் தம்முடைய த்ரி தண்டத்தையும் ஒரு கைங்கர்ய பரர்கையிலே கொடுத்துத் தாம் கை வீசிக்கொண்டு போகா நின்றார்களே! அவர்களின் திருமேனி அத்தனை ஸுகுமாரமானால் எம்பெருமானைப் பற்றிச் சொல்லவேணுமோ? திருவாழி திருச்சங்கு முதலான திவ்யாயுதங்களைத் தாமே சுமக்கலாமோ? அவற்றைச் சுமக்க ஆள்வைத்துக் கொள்ள வேண்டாவோ வென்கிறார். எம்பெருமானுடைய ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்தவாறே திவ்யாயுதங்களைத் தாங்குகையும் மலைசுமந்தாற்போலே சுமையாய்த் தோற்றுகிறது ஆழ்வார்க்கு. இதற்கு மேலே *வாளும் வில்லுங்கொண்டு பின் செல்வார் மற்றில்லை* என்கிற வயிறுபிடி இன்னமும் விலக்ஷணமானது. ... *

* "நண்ணாவசுரர்நலிவெய்த" *

18. திருவாய்மொழி பத்தாம்பத்தில் (7-5) *நண்ணாவசுரர் நலிவெய்த* என்று தொடங்கும் பாசுரத்தில் திருவாய்மொழி அவதரித்தபடியை ஆழ்வார்தாமே அற்புதமாய்ப் பேசுகின்றார். ஆஸுரப்ரக்ருதிகள் தொலையவும் தைவப்ரக்ருதிகள் வாழவும் திருவாய்மொழி அவதரித்ததென்கிறார்—"நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த" என்று. திருவாய்மொழியினால் ஆஸுரப்ரக்ருதிகள் தொலைவது எங்ஙனம்? என்று கேள்விவரும். இங்கே ஈட்டில் அருளிச் செய்வது—

"அவ்யபதேச்யனுக்கு அனந்தரத்திலவன், தமப்பன் செய்ததைக்கேட்டு 'இவனென்செய்தானுனன்!' என்று கர்ஹித்தான்; 'ஒரு மதிளை வாங்குங்காட்டில் அத்தர்சநம் குலைந்ததோ? திருவாய்மொழியென்றும் ஸ்ரீராமாயண மென்றும் வலியன இரண்டு ப்ரபந்தங்களுண்டாயிருக்க' என்றுனயிற்று. இப்படி உகவாதார் நெஞ்சுளுக்கும்படியான ப்ரபந்தமாய்த்து"—என்று. இதனைச் சிறிது விவரிப்போம். இங்கு அவ்யபதேச்யனென்றது க்ரிமி கண்ட சோழனை. அவனுடைய பெயரை வாயாலே யெடுத்துரைக்கக் கூசி அவ்யபதேச்யனென்றது அவனுக்கு அனந்தரத்திலவன்—அவனுடைய மகன். அவன் தகப்பன் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்திற்கு விரோதமாகச் செய்த அதர்க்கணச் செயல்களைக் கேள்விப்பட்டானும்; பெருமாள் கோவிலை இடித்துப்போட்டானென்று கேள்விப்பட்டு ஐயோ! ஒரு கோவிலை இடித்துப்போட்டதனுல் என்னுகும்! இதனுல் தர்சனம் குலைத்ததாமோ? திருவாய் மொழியும் ஸ்ரீராமாயணமுமாகிய இரணடு பிரபந்தங்களன்றோ ஸ்ரீ வைஷ்ணவ தரிசனத்திற்குக் கல்மதிளாயிருப்பவை; அவற்றை யசைக்கமுடியுமோ ஒருவர்க்கு? என்றுனும் அந்த கிரிமிகண்ட சோழனது மகன். இதனுல், திருவாய்மொழியானது ஆஸுரப்ரக்ருதிகள் மண்ணுண்ணும்படியாகவும் தேவப்ரக்ருதிகள் வாழ்ந்து போம்படியாகவும் அவதரித்தது என்னுமிடம் ஒரு சிறுவன் வாயினுலும் வெளி வந்ததென்று காட்டினபடி. ... ... .... (18.)

அஷ்டாதச மஹார்த்த நிதியில்
பத்தாவது பதினெட்டான பகவத் விஷயப் பதினெட்டு
முற்றிற்று.

ஸ்ரீரஸ்து

## ஸ்ரீமத்வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையின் ஆவிஷ்கார மஹோத்ஸவம்.

விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகள் அருளிச்செய்த திவ்ய ஸ்ரீஸூக்திகளெல்லாம் 'ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலா' என்னும் திருநாமத்தினுல் இரண்டு ஸ்ம்புடமாக அச்சிடப்பட்டு வருகின்றதென்பதை சில மாதங்களுக்குமுன்னமே ப்ரகடனம் செய்திருந்தேன். அதில் முதல் ஸம்புடம் பன்னிரண்டு திவ்ய க்ரந்தங்கள் கொண்டது அச்சிட்டு முடிந்தது.

நாளது ஐப்பசி மாதத்தில் திருமூல நன்னுட்கள் இரண்டு ப்ராப்தமாகிறபடியால் அதற்கு நினைவுமலராகவே இந்த க்ரந்தமாலை அச்சிடப்பட்டதனுல் ஐப்பசிமீ 3௳ (19—10—66) திருமூலத்தன்று, தேவப்பெருமாள் தேவஸ்தானம் மணவாளமாமுனிகள் ஸன்னிதியில் பகல் மூன்றுமணிக்குத் திருப்பாவை சாத்துமுறை கோஷ்டியில் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. அழகிய மணவாளயதீந்த்ரப்ரவண ராமாநுஜஜீயர் ஸ்வாமியின் ஆத்யக்ஷயத்திலும், ஸ்வாமி ஸன்னிதி ஆதீனம் ஸ்ரீ உ. வே. வானமாமலை, திருவேங்கடாசார்ய ஸ்வாமியின் உபாத்யக்ஷயத்திலும் ப்ரதம ஸம்புடத்தின் ஆவிஷ்கார நிகழ்ச்சி நடைபெறும். ஸகல ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமிகளும் எழுந்தருளியிருந்து குழாங்கூடி யநுபவிக்கவேணுமென்பது ஸவிநயப்ரார்த்தனை.

இங்ஙனம்.
ஸ்ரீவைஷ்ணவ தாஸன்.
பி. அண்ணங்கரார்ய தாஸன்.

சின்னகாஞ்சீபுரம்,
10—10—66.

குறிப்பு:—முன்னமேகுறித்த பன்னிரண்டு திவ்ய க்ரந்தங்களடங்கிய (தொண்ணூறு பாரங்கள் கொண்ட) முதல் ஸம்புடத்தின் விலை 25 ரூபா. வெளியூர்களுக்குத் தபால் ரிஜிஸ்டர் செலவு ரூ. 3.

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 75. | திருப்பாவை ஜீயர் | 0 | 75 |
| 76. | திருப்பாவை ஸ்வாபதேச உரை | 1 | 00 |
| 77. | திருவாய்மொழியாயிரம் தீபிகை | 25 | 00 |
| 78. | திருமந்த்ரார்த்த ஸாரம் | 2 | 00 |
| 79. | திருவல்லிக்கேணி உபந்யாஸமாலை | 1 | 50 |
| 80. | திவ்யப்ரபந்தக்கண்ணாடி | 1 | 00 |
| 81. | திவ்யப்ரபந்த ஸாரத்திரட்டு | 0 | 75 |
| 82. | திவ்யஸூரி சரிதகால நிர்ணயம் | 0 | 75 |
| 83. | துவரைப்பிரான் திருவருள் | 0 | 75 |
| 84. | தேசிக ஸஹஸ்ரநாம விமர்சனம் | 1 | 25 |
| 85. | தொழுகையும் தொழச்செய்கையும் | 0 | 75 |
| 86. | த்ரமிடோபநிஷத்ப்ரபாவஸர்வஸ்வம் | 2 | 00 |
| 87. | த்வயார்த்தஸாரம் | 1 | 00 |
| 88. | நப்பின்னையவதார ரஹஸ்யம் | 1 | 00 |
| 89. | நரஸிம்ஹாவதாரஹேது நிர்ணயம் | 0 | 75 |
| 90. | நல்வார்த்தை நானூறு | 2 | 00 |
| 91. | நற்போது போக்கு | 0 | 75 |
| 92. | நித்யாநுஷ்டான பத்ததி | 0 | 75 |
| 93. | நித்யாநுஸந்தான உரை | 5 | 00 |
| 94. | நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி உரை | 1 | 50 |
| 95. | பகவத்கீதை யறுபத்திரண்டு | 1 | 00 |
| 96. | பக்ஷீச சாகாநிலய: (உபந்யாஸம்) | 0 | 75 |
| 97. | பன்னிருதிங்களனுபவம் | 2 | 00 |
| 98. | பவித்ரயாத்ரா பரமானந்தம் | 1 | 00 |
| 99. | பாதுகா ஸஹஸ்ராவதார விசாரம் | 1 | 00 |
| 100. | பாதுகாஸஹஸ்ர வுரையாராய்ச்சி | 0 | 75 |
| 101. | பார்த்தஸாரதியின் ப்ரபாவம் | 1 | 00 |
| 102. | பூர்வாசார்ய வைபவம் | 1 | 50 |
| 103. | பெரிய திருமொழி தீபிகை | 16 | 00 |
| 104. | ப்ரமேயஸார உரை முதலியன | 1 | 50 |
| 105. | மணவாளமாமுனிகள் கட்டியம் | 0 | 76 |
| 106. | மணவாளமாமுனிவாத்ஸல்ய விவரணம் | 0 | 75 |
| 107. | மணவாளமாமுனிகள் வைபவம் | 0 | 75 |
| 108. | மதுரோபந்யாஸமாலை | 0 | 75 |
| 109. | முமுக்ஷுப்படி ஸாரார்த்ததீபிகை | 2 | 00 |
| 110. | முதலாயிரவுரை தீபிகை | 16 | 00 |
| 111. | யாத்திரை விளக்கு | 1 | 00 |
| 112. | யுஷ்மத்ஸூக்தி ஸௌரபம் | 0 | 75 |
| 113. | ரத்னபரீக்ஷா (வடமொழி) | 0 | 75 |
| 114. | ராமாநுஜ தயாபாத்ரதத்வம் | 1 | 00 |
| 115. | ராமாநுஜ தயாபாத்ர சரித்ரம் | 1 | 00 |
| 116. | ஷை வடமொழியும் ஆங்கிலமும் | 1 | 50 |
| 117. | ராமாநுஜ ஜயந்திமலர் | 1 | 00 |
| 118. | வம்பவிழ்கோதை தத்துவம் | 1 | 00 |
| 119. | வர்ணமாலை | 0 | 75 |
| 120. | வரதன் ஸன்னிதி வரலாறு | 1 | 00 |
| 121. | வாக்யஜ்ஞமலர் | 1 | 00 |
| 122. | வாதிபீகர விஜயம் | 1 | 00 |
| 123. | வால்மீகி ராமாயண வசனம் | 8 | 00 |
| 124. | விசிஷ்டாத்வைத தர்சனம் | 1 | 00 |
| 125. | விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம் | 1 | 00 |
| 126. | வித்வத்வைதிக பூஷணம் | 1 | 00 |
| 127. | விதவாவபன விசாரம் | 0 | 75 |
| 128. | வேதபாஷ்ய விமர்சம் | 0 | 75 |
| 129. | வேதாந்த தேசிக சரித்ரம் | 1 | 00 |
| 130. | வேதாந்தாசார்ய வைபவம் (ஸம்) | 1 | 25 |
| 131. | வைசாகோத்ஸவ உபந்யாஸமாலை | 1 | 00 |
| 132. | வைதிகலௌகிகமஹநீயமண்டலி | 2 | 00 |
| 133. | வைதிக வித்வதாபரணம் | 1 | 00 |
| 134. | வைஷ்ணவ மஹாநிதி | 1 | 00 |
| 135. | ஸத்புருஷஸமாராதனம் | 1 | 00 |
| 136. | ஸத்ஸம்ப்ரதாய பரித்ராணம் | 1 | 00 |
| 137. | ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன் | 1 | 00 |
| 138. | ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி | 2 | 00 |
| 139. | ஸதாசார்யஸூக்தி ரக்ஷா | 1 | 00 |
| 140. | ஸதுபந்யாஸரத்ன மாலை | 1 | 00 |
| 141. | ஸம்வாத ஸம்மார்ஜநீ | 0 | 75 |
| 142. | ஸர்வஜ்ஞ ஸூக்தி ஸர்வஸ்வம் | 2 | 00 |
| 143. | ஸாதுஸாத்விக ஸம்வாதம் | 1 | 00 |
| 144. | ஸத்ஸம்ப்ரதாயார்த்த ரக்ஷா | 1 | 25 |
| 145. | ஸ்ரீராமாநுஜன் மாதப் பத்திரிகை வருடச் சந்தா | 5 | 00 |
| 146. | வைதிக மநோஹரா வடமொழி ஷ பத்ரிகை சந்தா | 10 | 00 |
| 147. | ஸ்ரீராமாநுஜ பத்ரிக (தெலுங்கு) | 10 | 00 |
| 148. | ஸ்ரீராமாநுஜன் பழைய ஸஞ்சிகைகளின் வால்யம் (பயிண்டு) | | |
| 149. | P. B. A. நூல் தொகுதிகள் 12 | 100 | 00 |
| 150. | வைதிக லௌகிக மஹநீய மண்டலி | 2 | 00 |

மற்றுமுள்ள நூற்றுக்கணக்கான புத்தகங்களுக்கு வேறு லிஸ்டைப் பார்க்க.

மிக முக்கியமான அறிவிப்பு;—நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபை புத்துயிர்பெற்று நாலைந்து மாதங்களாகின்றன வென்பதும் இச்சபையின் மூலமாக ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பதும் உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... ... ... .... ( )

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.–11.

(4) S. R. SRINIVASAYYANGAR,
11/5, ஐஸ்ஹௌஸ் ரோட், திருவல்லிக்கேணி.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

360. Sri. Vangeepuram Raghavacharya,
MELKOTE :(Mysore).




Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kanchipuram.